


# ஸப்தகிரி

திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்

செப்டம்பர்

1981

# ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலுக்குள் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை,(தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, ஏகாந்தம், 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

1-00 முதல் 7-00 வரை: சர்க்கார் மற்றும் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், ஊஞ்சல்சேவை முதலியன (சர்க்கார் மற்றும் ஆர்ஜித தெப்போற்சவங்கள் செவ்வாய்க்கிழமைகளில் மட்டுமே,

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி

8-00 முதல் 12-00 (நடு இரவு) **ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்த சேவை (தனி)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலஸாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலஸாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) 2வது மணி.

8-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்.**

மதியம் : 1-00 முதல் மாலை 6-00 வரை: சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவங்கள், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் நடுஇரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்.**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வியாழக்கிழமைகளில் (ஆர்ஜித திருப்பாவாடை, பூலங்கி சேவை ஆகியவை நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை(தனி)

4-30 முதல் 4-45 வரை : பங்காரு வாயிலில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை (ஸகஸ்ரநாம அர்ச்சனை (தனி)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் 8-00 வரை : சாலிம்பு, 2வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவாடை அலங்காரம், மணி முதலியன;

8-00 முதல் மாலை 6-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன.

மாலை 6-00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவுமணி முதலியன;

இரவு 8-00 முதல் 12-00 வரை : **பூலங்கி ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)

**வெள்ளிக் கிழமைகளில் (அபிஷேகம் நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம்
(ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை கைங்கர்யங்கள், காலை முதல் மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

5-00 முதல் 7-00 வரை : அபிஷேகம் (தனி)

7-00 முதல் 8-30 வரை : சமர்ப்பணை முதலியன

8-30 முதல் 9-30 வரை : தோமால சேவை அர்ச்சனை (தனி)

9-30 முதல் 10-00 வரை : 2வது மணி, பலி, சாத்துமுறை முதலியன

10-00 முதல் இரவு 7-00 வரை : **ஸர்வதரிசனம்**

மதியம் 1-00 முதல் மாலை 6-00 வரை : சர்க்கார் ஆர்ஜித கல்யாணோற்சவம், ஆர்ஜித பிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள், சர்க்கார் மற்றும் ஆர்ஜித ஊஞ்சல் சேவை முதலியன,

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள் இரவு மணி முதலியன;

8-00 முதல் இரவு 12-00 வரை **ஸர்வதரிசனம்**

12-00 முதல் 12-30 வரை : சுத்தி, ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்.

12-30 நடு இரவு : ஏகாந்தசேவை (தனி)



நாட்டினைத் துயரின்றி நன்கமைத் திடுவதும்
உள்ளமெனு நாட்டை யொரு பிழையின்றி
ஆள்வதும் பேரொளி ஞாயிறே யனைய
சுடர்தரு மதியொடு துயரின்றி வாழ்தலும்
நோக்கமாக் கொண்டு நின்பத நோக்கினேன்
காத்தருள் புரிக, கற்பக விநாயகா,
காத்தருள் புரிக, கடவுளே, யுலகெலாம்
கோத்தருள் புரிக, குறிப்பரும் பொருளே,
அங்குச பாசமுங் கொம்புந் தரித்தாய்
எங்குல தேவா, போற்றி !
சங்கரன் மகனே தாளிணை போற்றி.

பாரதியார்.






தனிப்பிரதி 50 காசு

வருடச் சந்தா ரூ. 6

செப்டம்பர் 1981

மலர் 12
இதழ் 4



*சிறப்பாசிரியர் :*

திரு. பி. வி. ஆர். கே. பிரசாத், I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*ஆசிரியர் :*

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.
தி. தி. தேவஸ்தானம்,
திருப்பதி.

*அச்சிடுபவர் :*

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி. தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

முழு விவரங்களுக்கு:

EDITOR
'Sapthagiri'
Alipiri Road,
TIRUPATI.


# உள்ளுறை

பக்கம்


| | | |
|---|---|---|
| தூக்கிய துதிக்கை | ... | 3 |
| பிள்ளையார் நோன்பு | ... | 5 |
| கீதை காட்டும் நல்வழி | ... | 7 |
| திருமூலரும் திருமந்திரமும் | ... | 10 |
| நானிலமும் நாலாயிரமும் | ... | 11 |
| விநாயகர் வடிவ விளக்கம் | ... | 13 |
| வேத உப அங்கங்கள் — உபவேதங்கள் | ... | 15 |
| மகளிரும் நாணமும் | ... | 17 |
| வாழ்வு என்னும் போர்க்களம் | ... | 19 |
| பொய்கை முனிவர் | ... | 22 |
| வைணவ வினா-விடை | ... | 23 |
| இந்திய மருத்துவம் | ... | 25 |
| நவக்ரஹங்கள் | ... | 29 |
| திருமாலின் திரு அவதாரங்கள் | ... | 31 |
| இராவணன் கொடியவனே | ... | 37 |
| ராசி பலன் | ... | 39 |

# தூக்கிய துதிக்கை

### ஸ்ரீ மஹாகணேச பஞ்சரத்னம்

*முதா கராத்த மோதகம் ஸதா விமுக்தி ஸாதகம்*
*கலாதரா வதம்ஸகம் விலாஸிலோக ரட்க்ஷகம்!*
*அநாயகைக நாயகம் விநாஸிதேப தைத்யகம்*
*நதாஸு பாஸு நாஸகம் நமாமிதம் விநாயகம்!!*

(ஆதிசங்கரர்)

**முன்னுரை**

பக்தர்கள் போற்றும் முதற் கடவுள் கணபதி. கணங்களுக்கெல்லாம் பதியாய் இருக்கப்பட்டவர். அறிவு, அநுக்ரஹம் முதலான எல்லா முதன்மைக்கும் இத்தும்பிக்கைக் கணபதியையே வழிபடுவதை நாம் காண்கின்ரேம். எல்லா பூஜை மற்றும் நிகழ்ச்சிகளிலும் இக்கணபதியே முதலிடம் பெறுகிருர்.

பெற்றப் பிள்ளையைப் பத்துமாதம் தன் வயிற்றிலே வைத்துக் காப்பாற்றுகின்ருள் தாய். அந்த உயிரும் பத்திரமாய் அங்கே வளர்ச்சியடைகின்றது. அதைப் போல இந்த உலகத்து உயிர்களை எல்லாம் தன் வயிற்றிலே வைத்துக் காப்பாற்றுகின்ருர் விக்னேஸ்வரர். அவன் மத்தள வயிற்றினில் அனைத்துலகம் என்பது தத்துவம். உலகம் உருண்டை. அவருடைய வயிறும் உருண்டை. இதுதான் அவருடைய விரிவான விளக்கம். அவரைப்போல காக்கும் கடவுள் இல்லை. அதனால்தான் தனிப் பெருஞ்சிறப்புடையவராகப் போற்றப்படுகின்ருர். இவரைப் புகழாதவரில்லை. தத்துவப் பிரணவ திருவுருவம் நுண்ணியதான பொருள். இது அருள் கை வரப் பெற்றவர்வர்கட்கே விளங்கும். மற்றையோருக்கு இயலாது என்பது மறை பொருள்.

மற்ற தெய்வங்களை ஆயிரம் போற்றிப் பாடினும் இவரை வணங்காது போனல் ஆவல் எதுவும் பூர்த்தியாகாது என்பது சம்பிரதாயம். இத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த கணபதி வழிபாடு சித்தி பல கொடுக்கும் என்பதை அவன் மஹிமையில் நம்பிக்கைக் கொண்டோர் நன்கறிவர்.

**விக்னேஸ்வரர் சொரூப விளக்கம்**

யானை முகத்தோடு கூடி பாசம், அங்குசம், ஒற்றைக் கொம்பு, துதிக்கை, மோதகம் கொண்டு விளங்கும் திருக்கோலமே விநாயகத் திருக்கோலம். இறைவனின் ஐம்பெருந் தொழில்களையும் காட்டிக் குறிக்கும் முகமாக முறையே படைத்தல், அழித்தல், காத்தல், மறைத்தல், அருளுதலாகிய பிள்ளையார் இவரே என்று மேற்படி திருக்கோலம் அறிவிக்கின்றது.

இந்த மூர்த்தியின் உருவமே தத்துவம் பல காட்டுகிறது. பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேஸ்வரன், சதாசிவன் ஆகிய 5 மூர்த்திகளின் அம்ச சொருபமாக விளங்குபவரே விநாயகப் பெருமான் என்பது குறிப்பு. ஆதலின் இவர் ஒருவரை வழிபட்டாலே மற்ற தெய்வங்களை வழிபட்டதின் பலனைப் பெறுவர் என்ற கருத்தும் சொல்லப்படுகிறது.

**விக்னேஸ்வரர் வாழுமிடம்**

விநாயகப் பெருமானுக்கு கோயில் இல்லாத நகரமோ, கிராமமோ இல்லை. எல்லோரும் எளிதல் வணங்க வேண்டும் என்ற பெருங்கருணையினலே, யாவரும் வணங்கத் தக்கவாறு, அரச மரத்தடி, படித்துறை மற்றும் சின்ன சந்துகளிலெல்லாம் கூட இவர் திருவுருவம் இருப்பதைச் சாதாரணமாகக் காணலாம்.

**விநாயக சதுர்த்தி விரதம்**

ஸ்ரீ விநாயகக் கடவுள் முன்னொரு கற்பத்தில் பிரம்ம தேவன் கொட்டாவியில் உதித்த சிந்தூரன் என்பவனைச் சம்ஹாரம் செய்யும் பொருட்டு கஜானன மூர்த்தியாய் அவதரித்த தினம் ஆவணி மாதம் பூர்வ பட்சம் சதுர்த்தி. இந்த சுப நாளில் சிவபெருமானும் உமாதேவியாரும் அக்கடவுளை பூஜித்ததினல் இவ்வுலகில் நம்முடைய மதஸ்தர்கள் யாவரும் வருடந்தோறும் மேற்படி நாளில் விரதம் அனுஷ்டிப்பதாக ஐதிகம்.

ஆகையால் அன்றைபத் தினம் காலையில் எழுந்து ஸ்நானஞ் செய்து, நித்யானுஷ்டானக் கிரமங்களை முடித்துக் கொண்டு, அபிஷேகம், அலங்காரம், அர்ச்சனை, நிவேதனம், தூபம், தீபம் இவைகட்கு வேண்டிய பொருள்களை சேகரித்து, பூஜா மண்டபம் அலங்கரித்து பரிசுத்தமான இடத்து மண் எடுத்து அதில் வேர், கல், செல் முதலிய ஜந்துக்கள் இல்லாமல் ஆராய்ந்து அதனைப் பிசைந்து, விநாயகர் திருவுருஞ் செய்து, பின் கலசம் ஸ்தாபித்து, கலச பூஜை செய்து, அக்கலசத்து மேற்கில் யந்த்ர மிட்டு அதன்மீது ஸ்வர்ண மூர்த்தியையும், மற்றெரு பீடத்தில் ப்ரிதிமி மூர்த்தியையும் எழுந்தருளச் செய்து, ஆகம சாஸ்த்ர விதிப்படி பூஜித்து, இன்னன்ன மந்த்ரங்கள் ஜெபிக்க வேண்டிய முறைப்படி ஜெபித்து வருகையில் பத்து ஜெபத்திற்கு ஒரு தர்ப்பணம் ஒரு ஹோமம் செய்ய வேண்டும் என்று நியமித்திருக்கிறது.

---

முருகனடி எஸ். ஜெயராமன்
சேலம் டவுன்

---

பத்து ஹோமத்திற்கொரு தரம் அன்னதானம் என்பதும் அதிலடக்கம். இவ்விதமாக ஆகாரம், நித்திரை முதலியவைகளை நிக்ரகித்தாவது முதனுள் மாத்திரம் உணவையொழித்து, மற்ற நாட்களில் பால், பழம், அவிசு, இவற்றில் யாதேனும் ஒன்றைப் புசித்துக் கொண்டாவது இச்சதுர்த்தி தொடங்கி பின் வரும் பூர்வ பட்ச சதுர்த்தி வரையிலும் இப்பூஜை ஏற்பவர்கள் இஷ்ட சித்தி பெறுவர். பாரினில் மேன்மையுறுவர். நலம் பல பெறுவர் என்பது நம்பிக்கை.

அர்ச்சனைக்கு மாசி பத்திரி, தகறை, வில்லம், ஊமத்தை, நொச்சி, அருகு, நாயுருவி, கத்தரி, வன்னி, அலரி, காடாத்தி, எருக்கு, மருது, சாந்தி, மாதுளை, தேவதாரு, அருநெல்லி, சிறு செண்பகம், கொந்தளி, பாதிரி ஆகிய 21 விதமான பத்ரங்கள் உரியவை. அன்னதானம் 21 பேருக்கு எள்ளளவும் குறையாமல் செய்ய வேண்டும்.

இந்த விரதம் அனுஷ்டிப்பதற்கான காரணமும், கிரமமும் இங்குச்

சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருக்கிற விபரம் அறிய வேண்டியது. விநாயகர் புராணத்திலும், மற்றும் கஜானனர் திருவவதாரப் படலத்திலும் இது விரித்து சொல்லப்பட்டிருக்கிறதாக அறிகிறோம்.

**அருள் பெற்ற அடியார்கள்**

ஔவையார், அகஸ்தியர், வியாஸர், நக்கீர தேவர், அருணகிரிநாதர், ஆதிசங்கரர் முதலானப் பெரியோர்களாவர்.

**விக்னம் தீர்க்கும் விநாயகர் அகவல்**

கணபதி துணையுடன் ஔவையார் அருளிச் செய்ததே இவ்விநாயகர் அகவல். பக்தியுடனே இதைப் பாராயணஞ் செய்பவர்களுக்கு பிணியும், வறுமையும் நீங்கும். அன்றி சகல விக்னமும் போய்ப் பயன்களெல்லாம் கைகூடும். இதைப் படித்தாலும் பக்க நின்று கேட்டாலும் பாரினில் மேன்மைகள் பெறுவர். விநாயகர் அகவல் மற்றும் கவசம் முதலானவைகள் பாராயணத்திற்குரியவை. இவைகளை ஓதினால் மிகவும் விசேஷம்.

**அகஸ்தியரும் ஐங்கரனும் :**

முனிவர்கள் சார்பிலே மேலான தகுதியுடைய தலைவர் அகஸ்திய மஹரிஷியே. ஆனைமுகனின் தம்பி ஆறுமுகனின் உபதேசம் பெற்றவர். மஹா சமுத்திரத்தை உள்ளங்கை நீராக எடுத்து ஆசமனியம் செய்தவர். பார்வைக்கு சிறியவரானாலும் வரம் பல பெற்ற பெருமை கொண்டவர். இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழுக்கும் முன் நின்று இலக்கணம் வகுத்து அதனால் அரும் பெரும் செயல்களை செய்தவர் அகத்திய மாமுனிவர். அப்பெருமகனார் பொதிய மலைச்சாரலிலே சங்கத்தமிழ் அமைத்து வளர்த்து வந்ததாக வரலாறு.

சந்தனப்பொதிய செந்தமிழ் முனிவனும் அவர்தம் பெருமை புகழற்குரியதே. விந்தகிரியின் மமதையை அழித்தவர். வில்வல வாதாபியின் ஆயுளை முடித்தவர். அன்னவராம் இவர் இறைவனிடம் புலமைப்பெற்றவர்; செவ்வேள் தெய்வத்தின் மாணவர்; தென்திசைக்கண்ணுள்ள பொதிய மலைதான் இவரது இருப்பிடம். அகஸ்தியருக்கும் கோயிலுண்டு.

**காவிரி தந்த கணநாதன் :**

ஒரு சமயம் இந்திரன் சூரபன்மனுக்குப் பயந்து மூங்கில் வடிவாய் சீர்காழியிலே சிவபெருமானை நோக்கி தவஞ்செய்து கொண்டிருந்த நிலையில் அப்பொழுது அவ்வழியே வந்த நாரதரைக் கண்டு பணிந்து வணங்கினான். சிவபூஜைக்கென்று பயிரிட்ட நந்தனம் நீரின்றி வாடுகின்றதெனக் கூறினான்.நாரதர் அவ்வருத்தம் நீங்க ஒரு உபாயம் சொல்வாராயினர். கொங்கு நாட்டிலே சிவபூஜை செய்து கொண்டிருக்கிற அகத்திய முனிவர் இறைவனின் கட்டளைப்படி கங்கை நீரைக் கமண்டலத்திலே ஏந்தியுள்ளார். அவருடைய கமண்டலத்தை விநாயகரைக் கொண்டு கவிழ்த்தால் புனிதமாகிய காவிரியைத் தோற்றுவிக்கலாம். உன் மனக்குறை தீர்ந்து மஹாதேவனை அபிஷேகிக்க நீரும் கிடைக்குமென நாரதர் உபாயஞ் சொல்லி இந்திரனை உற்சாகப் படுத்தினார். தேவேந்திரனும் அவ்விதமே ஐந்து கரத்தனை, யானைமுகத்தனை மெய்யன்போடு வழிபாடு செய்தான்.

தேவராஜன் குறையைத் தீர்க்க கணநாதன் அகஸ்தியரின் கமண்டலத்தைக் காக வடிவில் கவிழ்த்துக் காவிரியைத் தோற்றுவித்து தந்தார். சிறைப்பட்ட பொன்னிநதி விநாயகப் பெருமான் அருள் பெற்று காவேரியாகப் பாய்ந்தாள். அப்பொழுது ஞானமே உருவான யானைமுகத் தெய்வத்தினிடத்தில் குன்றாத அன்புடையவராய் என்றுமிருக்க வரந்தர வேணும் என்பதாக சிரசில் குட்டிக் கொண்டு இப்படி வழிபடுவோர்க்கு சகல நன்மையும் உண்டாகும்படிக்கு நல்லருள் பாலிக்கவேண்டும் என்று அகஸ்திய முனிவர் வேண்டிக் கொண்டதின் பேரிலேயே இன்றும் இவ்வழக்கம் (நெற்றியில் பொட்டினில் குட்டும் வழக்கம்) விநாயகர் சந்நிதில் இருந்து வருகிறதை அறியலாம்.

**வியாஸரும் விநாயகரும்:**

வேதம்,இதிகாசம்,புராணம் இவைகளில் வித்தகர் வேத வியாஸர். ஆதி காவியகர்த்தா என இவரை அழைப்பர். வடமொழியில் அபார ஞானங் கொண்டவர். புராணங்கள் எல்லாம் இவரால்சொல்லப்பட்டதாகவே அறிகிறோம். ஆதியில் எல்லாம் வியாஸ பகவானால் செய்யப்பட்டது என்பது பிரசித்தம். விநாயகக் கடவுளைக் கொண்டு பாரதத்தை எழுதச் செய்த பெருமை இவ்வியாஸருக்கே உண்டு. இவருக்கு அங்கங்கே சில இடங்களில் ஆலயங்கள் இருப்பதாகவும் தெரிகிறது. ஒளி மயமான தவசீலரிவர்.

**விநாயகர் எழுதிய மஹாபாரதம்**

மஹா தபஸ்வியாகிய வியாஸர் இமய மலைச்சாரலில் தவஞ் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது அச்சிந்தையதில் தோன்றியக் காட்சியே மஹா பாரத நிகழ்ச்சியாம். அதுவே பின்னர் காவியமாக உருவெடுத்தது. இதனைப் பாட பிரம்மதேவர் அநுக்ரஹித்தார் என்பதாம். மேலும் ஞானக் கொழுந்தாகிய ஞான விநாயகரைக் கொண்டு எழுதும்படிக்கும் உபாயஞ் சொல்லி மறைந்தார்.

வியாஸ முனிவர் விநாயகப் பெருமானை வேண்டி துதி செய்தார். ஐங்கரமும் ஆனை முகமும் உடைய கணபதி அவர்க்கு காட்சியளித்தார். வியாஸர் அப்பெருமானை பன்முறை வணங்கி, ''ஐயனே! அடியேன் உலக நன்மைக்காக மஹாபாரதத்தைப் பாடுகின்றேன். நீர் மேரு மலையில் அதனை எழுதவேண்டும்' என பிரார்த்திக்க மஹா கணபதியும் அதற்கு ஒரு நிபந்தனை போட்டார். 'என் எழுதுகோல் நிற்கா வண்ணம் நீர்பாடுவீரானால் நானும் விடாமல் பாரதம் எழுதுகிறேன்' என்றருளினார்.

வியாஸரும் அதற்கு உடன்பட்டு 'அப்படியே பாடுவேன். பொருள் தெரிந்து நீர் எழுத வேண்டும்' என்றார். வியாஸர் எழுத்தாணியைத் தாமதிக்கச் செய்யும் பொருட்டுக் கடினப் பதங்களை அமைத்து சுலோகம் பாடினார்.

சிந்தித்தாலன்றி அதன் பொருள் விளங்காது. அதனால் விநாயகர் சிறிது சற்றே சிந்திப்பதற்குள் பல்லாயிரம் சுலோகங்களை மனதில் பாடிக்கொள்வார் வியாசர். இப்படியாக எண்ணாயிரத் தொண்ணூறு சுலோகங்களைப் பண்ணினார். இதன் பொருளை சுகர் மற்று சஞ்சயன் முதாலானோர் அறிவர். இப்பாரதத்தை நாரதர் தேவர்களுக்குச் சொன்னார். வைசம்பாயனர் மனித உலகுக்கு கூறினர் என்பதாக வரலாறு.

(40-ம் பக்கம் பார்க்க)

# ★ பிள்ளையார் நோன்பு ★

ஆவணி மாத சுக்ல பக்ஷ சதுர்த்தியே பிள்ளையாரைப் போற்றும் உயரிய தினமாகும். இமயம் முதல் குமரி மட்டும் இது கொண்டாடப் படுகிறது. விநாயகருக்குப் பிடித்தது மோதகம் என்னும் கொழுக்கட்டையாகும். மென்மையான மாவினால்



செய்த கிண்ணத்தில் பூரணம் என்ற இனிப்பை அடைத்த நூதனமான பண்டம் இது. மென்மையான இதயத்தில் பக்தி எனும் பூரணத்தை இட்டு விநாயகனுக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்பதே இதன் கருத்தாகும்.

நம் விநாயகர் பருத்த உருவமுள்ளவர். யானை போன்ற இந்த ஸ்வாமியை மிகவும் பலஹீனமான மூஞ்சூறு வாகனமாகி தாங்குகிறது. இது எதை உணர்த்துகின்றது என்றால் அடியார்களின் எளிமையான உள்ளத்தில் பெரிய கடவுளான விநாயகர் வீற்றிருப்பார் என்பதைத்தான்.

ஒவ்வொரு பிராணிக்கும் ஒரு அங்கத்தால் கௌரவம் உண்டு. மயிலுக்குத் தோகை, மாட்டிற்குக் கொம்பு என்பது போல யானைக்குத் தந்தம் தான் பெருமை தரும். நம் தியாகச் செம்மலான பிள்ளையார் தன் கௌரவச் சின்னமான தந்தத்தையே ஒடித்துக் கொண்டு பாரதத்தை எழுதினார். தர்மத்தைக் காக்க தந்தத்தையே தியாகம் செய்தவர் பிள்ளையார்.

பால கணபதி, பக்த கணபதி, வீர கணபதி, சக்தி கணபதி, வித்தி கணபதி, பிங்கள கணபதி, தருண கணபதி, த்விஜ கணபதி, உச்சிஷ்ட கணபதி, விக்ன கணபதி, க்ஷிப்ர கணபதி, ஹேரம்ப கணபதி, விஜய கணபதி, ந்ருத்த கணபதி, ஊர்த்வ கணபதி, மஹா கணபதி, வல்லப கணபதி, என்று கணபதியில் பலவகை தோற்றங்கள் உண்டு. இவைகளில் சில மூல மந்திரங்கள் ஸப்தகிரி வாசக அன்பர்களின் தியானத்தின் பொருட்டு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

### ஸ்ரீ கணேச காயத்ரீ

ஓம் ஏகதந்தாய வித்மஹே வக்ரதுண்டாய தீமஹி தன்னோதந்தி ப்ரசோதயாத்

### கணேச ஷடக்ஷரி

ஓம் மேதோல்காய ஸ்வாஹா

### ஸௌம்ய கணபதி மந்த்ரம்

ஓம் ஸ்ரீம் கம் ஸௌம்யாய கணபதயே வர வரத ஸர்வ ஜனம் மே வச மானய ஸ்வாஹா

### ஹரித்ரா கணேச மந்த்ரம்

ஓம் ஹூம் கம் க்லௌம் ஹரித்ரா கணபதயே வர வரத ஸர்வஜன ஹ்ருதயம் ஸ்தம்பய ஸ்தம்பய ஸ்வாஹா

### த்ரைலோக்ய வசீகரண கணபதி மந்த்ரம்

ஓம் வக்ரதுண்டாய தம்ஷ்ட்ராய க்லீம் ஹ்ரீம் ஸ்ரீம் கம் கணபதயே வர வரத ஸர்வஜனம் மே வசமானய ஸ்வாஹா

### சக்தி விநாயக மந்த்ரம்

ஓம் ஹ்ரீம் க்ரீம் ஹ்ரீம் கணபதயே நம:

---

*திரு. பி. சுந்தரராமன்,* M.A., B.Ed.,
*பழமார்னேரி - 613104.*

---

### வ்ராத கணபதி மந்த்ரம்

ஓம் நமோ வ்ராத பதயே
நமோ கணபதயே நம:
ப்ரமதபதயே நமஸ்தேஸ்து
லம்போதராய
ஏகதந்தாய விக்னவிநாசினே
சிவ ஸுதாய
வரத மூர்த்தயே நமோ நம ஸ்வாஹா

### தநாகர்ஷண கணபதி மந்த்ரம்

ஓம் க்லாம் க்லீம் கம் கணபதயே வரவரத மம தன தான்ய ஸம்ருத்திம் தேஹி தேஹி ஸ்வாஹா

### ஸங்கட ஹர கணபதி மந்த்ரம்

ஓம் நமோ ஹேரம்ப மத மோதித மம ஸங்கடம் நிவாரய நிவாரய ஸும்பட் ஸ்வாஹா

### மோஹன கணபதி மந்த்ரம்

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லாம் க்லௌம் கணபதயே வரவரத ஸர்வ ஜனம் மோஹய மோஹய க்லீம் ஸ்வாஹா

### ஸ்ரீ வல்லப மஹா கணபதி மந்த்ரம்

ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத ஸர்வ ஜனம் மே வசமானய ஸ்வாஹா

க்ஷிப்ர கணபதி மந்த்ரம்

ஓம் கம் கணபதயே ஸர்வ விக்ன ஹராய ஸர்வாய ஸர்வகுரவே லம் போதராய ஹ்ரீம் கம் ஸ்வாஹா

ஸித்தி விநாயக மந்த்ரம்

ஓம் நம: ஸித்தி விநாயகாய ஸர்வ கார்ய கர்த்ரே ஸர்வ விக்ன ப்ரசம நாய ஸர்வராஜ்ய வசீகரணாய ஸர்வ ஜன ஸ்ர்வ ஸ்திரீ புருஷ ஆகர்ஷணாய ஸ்ரீம் ஓம் ஸ்வாஹா.

ஸ்ரீ உச்சிஷ்ட கணபதி மந்த்ரங்கள்

1. ஓம் ஹ்ரீம் கம் ஹஸ்தி பிசாசி-லிகே ஸ்வாஹா

2 ஓம் நமோ உச்சிஷ்ட கணேசாய ஹஸ்தி பிசாசிலிகே ஸ்வாஹா

3. ஓம் நமோ ஹஸ்தி முகாய லம் போதராயஉச்சிஷ்டமஹாத்மனே ஆம் க்ரோம் ஹ்ரீம் கம் கே கே உச்சிஷ்டாய ஸ்வாஹா

4. ஓம் நமோ பகவதே ரக தம்ஷ்ட் ராய ஹஸ்திமுகாய லம்போத ராய உச்சிஷ்ட மஹாத்மனே ஆம் க்ரோம் ஹ்ரீம் கம் கே கே உச்-சிஷ்டாய ஸ்வாஹா

மேற்குறிப்பிட்ட அனைத்து கண பதி ஹோம மந்த்ரங்களையும் ஜபித் தும், ஹோமம் செய்தும் பலனடைய லாம். கொழுக்கட்டை தேங்காய்க் கீறு, அருகம்புல், அவல், பொரி, கரும்பு, மாதுளைமுத்து, கொய்யாப் பழத்துண்டு ஆகியவற்றால் ஹோமம் செய்யலாம். எதை ஹோமம் செய் தாலும் அது நன்கு அக்னியில் பக்கு வப்படாவிட்டால் வயிற்று நோய் கர்த்தாவிற்கு வந்து விடும். எனவே அக்னியை நன்கு வளர்க்க வேண்டும். ஹோமப் புகையை சுவாசிக்க எல்லா நோய்களும் விலகும்.

மஹா கணபதியை உபாஸிப்பதால் கேது தோஷம், வேத வித்துக்களின் சாபம், ஸன்யாசி சாபம் விலகும். ஐச்வர்யம் பெருகும். புத்திரப் பேறு உண்டாகும். தொழில் நிலைக்கும். மற்றும் எல்லா நோய் நொடிகளும் நீங்கும். எல்லா நன்மைகளுமே உண் டாகும்.

விநாயகர் தொந்தியும் தொப்பை யுமாக அழகு மிளிர ஆனந்த நடை நடந்து செல்வதை சந்திரன் பார்த்து பரிஹஸித்தானும். எனவே அவனது கலைகள் குறைந்து தேய்ந்து அழியு மாறு விநாயகர் சாபமிட்டாராம். அவன் மன்றாடவே தன் தந்தையான ஈசன் முடியில் நிலைபெறச் செய்து என்றும் அழியாத வரத்தை விநாய கர் அருளியதாகக் கதையும் உண்டு.

வடஇந்தியாவிலும் கணேஷ் சதுர்த்தி விரிவாகக் கொண்டாடப் படுகிறது. கப்பலேறிய பிள்ளையா ராகி, மலேயா, இலங்கை, தாய்லந்து, ஜப்பான், சீனா முதலிய நாடுகளில் கூட பிள்ளையார் வழிபடப்பட்டு வரு கிறார். ரங்கூன் கம்பைநகர் சுவேத விநாயகர் மிகப் பிரபலமானவர். நாடார்களின் குலதெய்வம்.

விநாயகப் பெருமானின் பிரபாவம் மிகப் பெரிது. ஆனால் பக்தர்கட்கு அவர் மிகவும் எளியவர். குழந்தையி லும் குழந்தை. அதனாலேயே அவர் பிள்ளையார் ஆகிறார். பிள்ளையார் பட்டி பிள்ளையார் நகரத்தார் செட்டி யார்கட்கு கண் கண்ட தெய்வம். இவர் உருவத்தில் மிகப் பெரியவர். இங்கு செய்யும் மிகமிகப் பெரிய கொழுக்கட்டையும் பிரசித்தி பெற் றது. திருச்சி மலைக்கோட்டை உச்சிப் பிள்ளையார் அருள் வேண்டி வழிபடுவோமாகுக!



# கீதை காட்டும் நல்வழி



**அத்தியாயம்-13**

**க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்**

பகுதி — 2

திரு. டி. கே. நாராயணன், M.Sc.
ஆசிரியர் ''சமய ஜோதி'' மதுரை

'க்ஷேத்ரம்' என்ற சொல் வயல் என்றும் பொருள் படுகிறது என்று முன்னர் பார்த்தோம். வயலில் எவ்விதம் நாம் திருப்பத் திரும்பப் பயிரிட்டு அறுவடை செய்கின்றோமோ அது போல இந்த உடலாகிய வயலில் ஆசை என்னும் விதையை விதைத்து செயல் என்ற நாற்றை நட்டு, கர்ம பலன் என்ற அறுவடையை நாம் பெறுகிறோம். எவ்விதம் விதை இல்லா விட்டால் பயிர் செய்ய முடியாதோ, அதுபோல ஆசை இன்றேல் கர்மம் செய்ய இயலாது. உடல் அல்லது சரீரம் என்பது வெறும் இந்த ஸ்தூல சரீரத்தை மட்டுமின்றி

ஸ்தூல, சூக்ஷ்ம மற்றும் காரண சரீரங்களின் மொத்தத் தொகுப்பையே குறிக்கிறது.

க்ஷேத்ரம் அல்லது சரீரத்தில் உறையும் க்ஷேத்ரக்ஞன் யார் என்ற கேள்விக்கு அடுத்த ஸ்லோகத்தில் விடை வருகிறது.

க்ஷேத்ரக்ஞம் சாபி மாம் வித்தி
ஸர்வ க்ஷேத்ரேஷு பாரத |
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞயோர்ஞானம்
யத்தத் ஞானம் மதம் மம || 2 ||

'அர்ஜுனா! க்ஷேத்திரங்கள் அனைத்திலும் என்னை க்ஷேத்ரஞன் என்று அறிக. க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய அறிவே ஞானம் என்பது என் கொள்கை!

வீடு என்றால் வீட்டினுள் வசிப்பதற்கு ஒருவர் இருந்தாக வேண்டும். எவரும் வசிக்காத வீடு பாழ் என்றே அழைக்கப்படும். பள்ளிக்கூடம் என்றால் அதில் பயில மாணவர்கள் இருந்தாக வேண்டும். பேனா என்றால் அதனுள் மை இருந்தாக வேண்டும். பால் என்றால் சுவை அதில் இருந்தாக வேண்டும். வார்த்தை என்றால் அதில் பொருள் இருந்தாகவேண்டும். அதுபோல் உடல் என்று இருந்தால் அதனுள் உறையும் ஒரு உயிர்த் தத்துவம் இருந்தாக வேண்டும். உயிர் அற்ற உடல் பிணம் என்று சுட்டு எரிக்கப்படுகிறது.

அதுபோல் க்ஷேத்ரம் என்பது பிரகிருதி. க்ஷேத்ரக்ஞன் என்பது புருஷன். ஸ்படிகத்திற்கு பக்கத்தில் வைக்கப்பட்டுள்ள சிவப்புப் பூவின் சிவப்பு நிறம் ஸ்படிகத்தில் காணப்படுவதுபோல, பிரகிருதியின் தன்மைகளுடன் சம்பந்தமுடையது போன்று புருஷன் தென்படுகிறான். பூவின் நிறம் ஸ்படிகத்தில் தோன்றுகிறதே ஒழிய உண்மையில் ஸ்படிகத்தில் எந்தவித மாற்றமும் ஏற்படவில்லை. அதுபோல பிரகிருதியின் மாறுபாடுகளும், வேறுபாடுகளும் எந்தவிதத்திலும் புருஷனைச் சாரமாட்டா.

வயல்கள் பலவாகத் தோன்றினாலும் அவை அனைத்தையும் தாங்கி நிற்கும் பூமி ஒன்றே. வயலிலே பல்வேறு பயிர்கள் பயிரிடப்பட்டாலும் அவை வளர்வதற்கான அடிப்படை உயிர்ச்சக்தி ஒன்றே. அதுபோல உடல்கள் பலவாகத் தென்படினும் அவற்றை உள்நின்று இயக்கும் சக்தி ஒன்றே. அதுவே ஆன்ம சக்தி. உடல் நோய் வாய்ப்படலாம். அதனால் ஆன்மா பாதிக்கப்படாது. உடல் இளைக்கலாம், பருக்கலாம், அழிந்து போகலாம். ஆனால் ஆன்மா அழியாது. மோதிரம், வளையல், ஒட்டியாணம்,சங்கிலி,கம்பல்,மூக்குத்தி,அரைஞாண் போன்ற நகைகளின் புறத்தோற்றம் மாறுபட்டாலும், அவற்றின் அடிப்படை மூலப்பொருளான தங்கத்தில் எந்தவித வேறுபாடும் கிடையாது. அதுபோல ஜீவாத்மாக்கள்பல. ஆனால் பரமாத்மனோ ஒன்று. உடல்கள், மனங்கள் போன்றவை எல்லாம் பலப்பல. ஆனால் அவற்றின் பின் உறையும் ஆன்ம சக்தியோ ஒன்றுதான். இதை உணர்பவன் ஞானி. உணராதவன் அக்ஞானி.

ஒரு விஞ்ஞானக் கூடத்திலே இருவர் வேலை பார்க்கிறார்கள். ஒருவன் விஞ்ஞானி. மற்றவன் டெக்னீஷியன் அல்லது கருவி வல்லுனன். விஞ்ஞான உண்மைகளும் நியதிகளும் தெரியாமல் வெறுமனே இயந்திரங்களை இயக்குபவன் டெக்னீஷியன். ஆனால் அதே டெக்னீஷியன் விஞ்ஞான உண்மைகளின் அடிப்படையில் சுயமாகச் சிந்தித்துச் செயல்படத்தலைப்படுகையில் அவனே விஞ்ஞானி ஆகி விடுகிறான்.

உடல் வெறும் ஜடப்பொருள். வெறும் ஜடப்பொருளை மட்டும் ஆராய்ச்சி பண்ணுபவன் அறிஞன். அதாவது புறஉலகை மட்டும் ஆராய்பவன் விஞ்ஞானி. ஆனால் உடலை இயக்கும் உயர்ப் பொருளை அதாவது ஜடமாகிய புறஉலகோடு சேதனமாகிய பரம்பொருளையும் சேர்த்து அறிபவன் மெய்ஞானி.

எல்லா உடலினுள்ளும் உறையும் பரம்பொருள் தானே என்கிறார் பகவான். உலகிலுள்ள எல்லாப்பொருள்களினுள்ளும் பரவிக் கிடக்கும் ஏக வஸ்து தானே என்கிறார் பகவான். பிரபஞ்சத்தை மட்டும் அறிவதுகுறையறிவு. பிரபஞ்சத்துடன் பகவானை சேர்த்து அறிவது நிறை அறிவு. அனைத்து க்ஷேத்திரத்தினுள்ளும் க்ஷேத்திரக்ஞனாகப் பகவான் விளங்குகிறார்.

அறிவு என்பது இருவகைப்படும். ஒன்று சிற்றறிவு அல்லது நூலறிவு. மற்றது பேரறிவு அல்லது வாலறிவு. ஒன்று புறஅறிவு, மற்றது அகஅறிவு. ஒன்று உலகைப்பற்றிய அறிவு, மற்றது கடவுளைப் பற்றிய அறிவு. ஒன்று பொய்ப் பொருளைப் பற்றிய அறிவு. மற்றது மெய்ப் பொருளைப் பற்றிய அறிவு.

**'द्वे विद्ये वेदितव्ये परा च अपरा च'** என்பது மறைவாக்கு. 'இருவகை அறிவு தேவை. ஒன்று பராவித்தை, மற்றது அபார வித்தை' க்ஷேத்திரத்தைப் பற்றிய வித்தை அபரவித்தை என்றும், க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய அறிவு அபரா வித்தை என்றும் பகரப்படுகிறது. வேதங்கள், வியாகரணம், சந்தம், நிருத்தம், தர்க்கம், பௌதீகப் பிரபஞ்ச சாஸ்திரங்கள் இவையாவும் அபரவித்தை. பிரம்மஞானம் பரவித்தை.இதுவேவாலறிவு. மற்றது யாவும் நூலறிவு. பிரம்மம் ஒன்றே மெய்ப் பொருள். அந்த மெய்ப் பொருளே க்ஷேத்ரக்ஞன். என்னதான் உலக அறிவில் மேம்மட்டு ஒருவன் உலகம் போற்றும் விஞ்ஞானியாகத் திகழ்ந்தாலும் இறையறிவு இல்லையென்றால், அது குறைபாடு உடைய அறிவேயாகும். இதனால் தான் திருவள்ளுவரும் தமது திருக்குறளில்,

'எப்பொருள் எத்தன்மைத் தாயினும்
அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பதறிவு'

என்று இயம்பியிருக்கிறார். உலக அறிவுக்கு ஒரு எல்லையே இல்லை.

'அறியும் தொறும் அறியாமை கண்டற்றே.' இது தான் இன்றைய மாபெரும் விஞ்ஞானிகளின் நிலை. அணுவைத் துளைக்க முடியாது என்று டால்டன் என்ற விஞ்ஞானி சொன்னான். இன்று அதையும் துளைத்து, அணுவினுள் உள்ள உட்கருவையும் துளைத்து, அந்த உட்கருவினுள் உள்ள புரோட்டானையும் துளைத்து 'குவார்க்குகள்' (Quarks) வரை இன்றைய விஞ்ஞானிகள் சென்றிருக்கிறார்கள். இனி அடுத்தபடி குவார்க்குகளையும் துளைப்பதாக இருக்கலாம். இதற்கு ஒரு எல்லை உண்டா? இருப்பதாகத் தெரியவில்லை. இதற்கு எதிர்காலம்தான் பதில் சொல்ல வேண்டும். இந்த அணுச்சக்திக்கெல்லாம் அடிப்படையாக விளங்கும் அந்தப் பராசக்தியே அனைத்திலும் மேலானது. அதை அறிவதே மெய் அறிவு என்கின்றனர் நம் முன்னோர்.

' அணோ ரணீயான் மஹதோ மஹீயான்'

'अणोरणीयान् महतो महीयान्' என்பது பரம்பொருளுக்கு நம்மவர் தந்த விளக்கம். 'சிறிதினும் சிறிதாய்ப் பெரிதினும் பெரிதாய்' என்பது இதன் பொருள்.

அபர வித்தையில் துவங்கிப் பர வித்தையில் முடிவதே உயர் ஞானமாகும். அறிவு வேறு. ஞானம் வேறு. ஆங்கிலத்தில் இதை Knowledge, Wisdom என்று கூறலாம். உலகைப் பற்றிய அறிவு வேறு. இறைவனைப் பற்றிய ஞானம் வேறு. விஞ்ஞானம் மெய் ஞானத்தில் கொண்டு போய் நம்மைச் சேர்க்க வேண்டும். பகுத்து அறியும் விஞ்ஞானம் தொகுத்து உணரும் மெய் ஞானத்தில் போய் முடிய வேண்டும். இதை அடிப்படையாகக் கொண்டு தானோ என்னவோ M.A., M.Sc., M.Com., என்று பல்வேறு துறைகளில் பட்டம் பெற்றவர்களுக்கு அதன் பின்னே அவர்கள் பல வருடங்கள் ஆராய்ச்சியில் ஈடுபட்ட பின்னர் அவர்களுக்குக் கொடுக்கப்படும் பட்டம் Ph.D., என்பதாகும். Ph.D., என்பது Doctor of Philosophy (தத்துவப் பேரறிஞர்) என்பதைக் குறிக்கிறது. தத்துவம் ஒன்றே, அது எது? தத்துவம் என்பதே தத்துவம். 'நீயே அது. அதுவே நீ' - அதாவது நீ எதை ஆராய்கின்றாயோ அதுவே நீயாக விளங்குகிறாய். ஆராய்வோனும், ஆராயப்படும் பொருளும் அடிப்படையில் ஒன்றே என்ற அத்வைதக் கருத்தை உண்மையை - உணர்ந்தோ உணராமலோ உலகோர் அனைவரும் ஒப்புக் கொண்டிருக்கின்றனர். இன்றைய விஞ்ஞானம் இந்தக் குறிக்கோளை நோக்கித்தான் படிப்படியாகப் போய்க் கொண்டிருக்கிறது. போற்றும் மாபெரும் விஞ்ஞானிகள் எல்லாம் தங்களை Atheist அல்லது Agnostic (நாத்திக வாதி அல்லது நிரீஸ்வரவாதி) என்று எப்படி அழைத்துக் கொண்டாலும் அவர்களே அறியாமல் இந்த உண்மையை நோக்கித்தான் பயணம் செய்து கொண்டிருக்கிறார்கள். இது நம் மாமேதைகள் அன்றே கண்ட முடிவாகும். அன்று நம்மவர்கள் தத்துவ வாயிலாகச் சொல்லியதை இன்று இவர்கள் சோதனைகள் வாயிலாக நிரூபித்துக் காட்டி வருகிறார்கள்.

புராணத்தில் ஒரு வரலாறு உண்டு. இறைவன் கையில் இருந்த ஒரு இனிய கனிக்காக மூத்த குமாரனை விநாயகப் பெருமானும், இளைய குமாரனை முருகப் பெருமானும் போட்டி போட்டனர். உலகத்தை (உலகின் தத்துவத்தை) முதலில் அறிந்து வருபவருக்கே இந்தக் கனி உரியதாகும் என்றார் பரம்பொருள். 'ஆகா, இதோ!' என்று உடனே கிளம்பி விட்டான் மயில் வாகனனை முருகன். பருத்த உடலுள்ள கணபதி என்ன செய்வார் பாவம், ஆலோசித்தார். வழி புலப்பட்டது. "அகில உலகமும் அம்மை அப்பனிடத்தில் அடக்கம்" என்ற உண்மையை உணர்ந்த அவர் சிவனையும், உமையையும் வலம் வந்து வணங்கி நின்று பழத்தைப் பெற்றார். அதற்குள் உலகைச் சுற்றி வந்து நின்றான் கார்த்திகேயன். கணபதிக்குத் தெரிந்த தத்துவம் முருகனுக்குத் தெரியாமல் போய் விட்டதா? என்ற ஒரு கேள்வி இங்கு எழும். அது முருகனுக்கும் தெரியும். அப்படியாயின் தத்துவத்தை உணர்த்த வேண்டி அவர்கள் நடத்துக் காட்டிய ஒரு நாடகம் இது. வெறும் உலக அறிவோடு ஒருவன் நின்று விடக் கூடாது. அதனுடன் கூட மெய்ப் பொருளையும் ஒருவன் உணர முற்பட வேண்டும். இயற்கையைப் பற்றிய அறிவுடன் இறை அறிவையும் பெறுவதே உண்மை ஞானம். இறைவனுக்கு அந்நியமான உலகம் வேறு எதுவும் கிடையாது. இறைவனுடன் இணைத்தே இயற்கையை அறிவது தான் உண்மை அறிவு. அதுவே ஞானம் எனப்படும் மெய் அறிவு.

வீடு மாளிகை போலப் பெரிதாக இருந்தாலும் அதனுள் விளக்கு எதுவும் எரிய வில்லையானால், இருள் சூழ்ந்த அவ்வீட்டிற்கு பெருமை எவ்வாறு கிடையாதோ அதுபோல இயற்கையைப் பற்றிய அறிவு இருந்து இறைவனைப் பற்றிய அறிவு இல்லையென்றால் அது இருள் சூழ்ந்த வீட்டிற்கு நிகராகும்.

' தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச
யத் விகாரி யதஸ்ச யத் ।
ஸ ச யோ யத் ப்ரபாவஸ்ச
தத்ஸமாஸேன மே ச்ருணு ॥ 3 ॥

" ' அந்த க்ஷேத்ரம் யாது? அதன் தன்மைகள் யாவை, என்ன பிரிவுகளை உடையது, எதிலிருந்து உண்டானது, அந்த க்ஷேத்ரக்ஞன் யார், அவனது மகிமை யாது'—இவைகளைச் சுருக்கமாகச் சொல்கிறேன், கேள்."

அனைத்து மறை நூல்களும் புகட்டுவது இந்த க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞனைப் பற்றியே ஆகும். புருஷன்-ப்ரகிருதி அல்லது இறைவன்-இயற்கையைப் பற்றியே அனைத்து வேதங்களும் பேசுகின்றன.

(தொடரும்)

# திருமூலரும் திருமந்திரமும்

குத்தாலம் பாலச்சந்திரன்

பாரத நாடு பழம்பெரும் புண்ணிய சீலர்களை தோற்றுவித்து அருள் ஞானம் வழங்கச் செய்து, நாடு பக்தியிலும் கலாச்சாரங்களிலும் சிறந்து விளங்கப் பல சித்தர்கள், சமயத் தலைவர்களைபெற்று பெருமை உடையது. குறிப்பாக தமிழ் நாட்டில் அத்தகைய பல சமயத் தலைவர்களும் ஞானிகளும் வாழ்ந்த சிறப்பு உடையது. சைவத் திருமுறைகள் பன்னிரெண்டில் 10ம் திருமுறையாகத் திகழும் திருமந்திரம் நமக்குக் கிடைத்த பெரும் பொக்கிஷம். அயல் நாட்டினரும் பாராட்டக்கூடிய நிலையில் உள்ள திருமந்திரத்தின் ஆசிரியர் திருமூலர். அவரே பாண்டிய நாட்டைச் சேர்ந்த சுந்தர நாதர். இளம் வயதில் பொதிய மலைத் தமிழ்ச் சங்கத்தில் சேர்ந்து உலக நூலைக் கற்று அவைகளில் முதல் வராகத் தேறினபடியால் குறு முனிவருடைய நட்பு அவருக்குக் கிடைத்தது. குறு முனிவரே சுந்தரநாதரை கயிலைக் குருகுலத்துக்கு அறிவு நூல்களைக் கற்க ஆசியுடன் அனுப்பினார் என்று கூறப்படுகிறது. சுந்தர நாதர் நந்தி எம்பெருமானின் பேரருளைப் பெற்றவர். வட கயிலைக் குருகுலம் முடிந்ததும் சுந்தரநாதர் பதஞ்சலி, வியாக்கிரமர் என்று இருவருடன்கயிலையினின்றும்புறப்பட்டுக் கேதாரம், பசுபதி, நேப்பாளம், காசி, பருப்பதம், காளத்தி, காஞ்சி, திருவாலங்காடு, திருவஹிந்தை தரிசித்து தில்லைக்கு வந்து ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு நடராஜப் பெருமானின் திருநடனக் காட்சியைக் காணத் தவம் இருந்தனர். மூவருக்கும் நடராஜப் பெருமான் திருநடனக் காட்சி அளித்தார். பின்னர் புண்ணிய சீலரான சுந்தரநாதர் திருவாவடுதுறைக்கு வந்து சிவ தரிசனம் செய்து புறப்பட்டு சாத்தனூர் எனும் ஊருக்கு அருகில் வரும் போழ்து அங்குப் பசுக்கள் மேய்ந்து கொண்டு இருக்கும் இடத்தில் பசுக்கள் மேய்க்கும் இடையன் இறந்து கிடப்பதையும் அவனைச் சுற்றிப் பசுக்கள் கண்ணீர் விட்டுப் புலம்பி நிற்பதையும் கண்டார். இந்த ஆயன் உயிர் பெற்று எழுந்தாலொழிய இப்பசுக்களின் துயரம் நீங்காதென உணர்ந்த இக்கருணையாளர் தமது உடலை ஒரு புறம் சேமித்து வைத்துத் தம் உயிரை இறந்து கிடந்த மூலன் என்னும் பெயரையுடைய அந்த இடையன் உடலில் அடைவித்து மூலனாய் உயிர் பெற்றெழுந்தனர். ஆயன் எழுந்ததைக் கண்ட பசுக்கள் அவனை நாத் தழும்ப நக்கி, மோந்து, அணைத்து, களைப்போடு நயந்து, களிப்பினால் வாலெடுத்துத் துள்ளித் துயரம் நீங்கின. மாலைப் பொழுது வந்ததும் பசுக்கள் தத்தம் இல்லங்களுள் தாமே நுழைய மூலனும் இவர் வெளியே நின்றார். இவர் காலம் தாழ்ந்து நிற்பதையும் அவரின் குணங்களையும் கண்ட இவர் மனைவி இவருக்கு ஏதோ ஈனம் அடுத்தது போலும் எனக் கவன்றுவந்து இவரை அழைக்க எனக்கு உன்னுடன் யாதொரு தொடர்பும் இல்லையென்று இவர் சொல்லி பொது மடம் ஒன்றிற் புகுந்தார். இச்சமயத்தில் பெரியவர்கள் பலர் வந்து இவரை அழைத்தும் பயனில்லாது போக "இவருக்கு ஞான உணர்வு வந்து விட்டது. இனி இவர் வர மாட்டார்'' எனக் கூறி மூலன் மனைவியை அவர்கள் அழைத்துச் சென்றனர். அவர்கள் நீங்கியதும் திருமூலர் தமது பழைய உடலைத் தேடினார். அது காணப்படவில்லை. பின்னர், 'இது ஆண்டவன் அருள் கயிலாயமும் இவ்வரசவனமும் ஒன்றே. நவ கோடி சித்தர்களுடன் வாழும் அகத்திய முனிவரையும் காணலாம் என்றும் ஆகமப் பொருளைத் தமிழில் வகுக்கவுமே இந்த லீலை' என்று தனது ஞான உணர்வால் உணர்ந்த பின் சிவனின் திருவடிகளை மனத்தில் வைத்து சுந்தர நாதராகிய திருமூலர் திருவாவடுதுறைக்கு வரும் போது அகத்தியர், போகர் முதலான யோக வித்தக சித்தர்கள் அனைவரும் எதிர்கொண்டு துதித்து வணங்கி அழைத்தனர். பின்னர் அவர் ஓர் அரச மரத்தின் கீழ் சிவயோகத்தில் அமர்ந்து ஆண்டுக்கு ஓர் பாடலாக சைவ ஆகமங்களில் உணர்த்தப்பட்ட ஞானம், யோகம், கிரியை, சரியை என்றும் நிலைகளை விளக்கும் மூவாயிரம் பாடல்களை ஆண்டுக்கு ஒன்றாக, மூவாயிரம் ஆண்டில் தெள்ளுத் தீந்தமிழில் உலகத்தவர் உய்யும் வகையில் இயற்றி பழமூவாயிரம் ஆண்டு இப்பூமியில் மகிழ்ந்திருந்து கயிலையில் சிவனடி அடைந்தார். அவர் பாடிய பாட்டுக்கள்தாம் திருமந்திரம் என்றும் போற்றுதற்குரிய பெரும் பொக்கிஷம். இத்தகைய சாத்திர நூல் திருவாவடுதுறை மாசிலாமணி ஈஸ்வரர் திருக்கோயிலில் உள்ள பலி பீடத்தருகே புதைந்து கிடந்ததாகவும் ஆங்கு தரிசனத்துக்கு வந்த திருஞான சம்பந்தப் பெருமான் பலி பீடத்தருகே வணங்கி எழுந்த போழ்து, 'இங்கு தமிழ் மணம் கமழ்கிறது. தோண்டிப் பாருங்கள்' எனக் கூற அங்ஙனமே தோண்டின போழ்து இத்திருமந்திர நூல் கிடைத்தது என்றுவரலாறுகூறுகிறது. அத்தகைய திருமந்திரம் பதினான்கு அறிவு நூல்களாக திகழ்ந்து உள்ளது. ஒன்பது தந்திரங்களால் அமைந்தது திருமந்திரமே ஆகும். அப்பர் சுவாமிகள் திருமந்திரக் கருத்துக்களையும் சொற்றொடர்களையும் ஆண்டுள்ளனர்.

(36-ம் பக்கம் பார்க்க)

# ★ நானிலமும் நாலாயிரமும் ★

இந்து சமயத்தின் பிறப்பிடம் இந்தியா. இந்து சமயத்திற்கென முன்னோர்கள் வழங்கிய பெயர் ''வைதிகம்''. அல்லது ''ஸனாதனம்'' என்பது. ஸனாதனம் என்ற சொல்லுக்கு முற்றிலும் பழைமை என்ற பொருள் மட்டும் அல்ல. என்றைக்கும் புதுமையாகத் தோன்றிப் பழைமையைப் பாதுகாக்கவல்லது எனப் பொருளாகும். ''ஸதாதனத் வேபி புரா நவத்வாத்'' என இச்சொல்லுக்கு இலக்கணமாகும். வானம், காலம் என்பன எப்பொழுது உண்டாயிற்று என்றோ யார் முதலில் அதனைக் கண்டுபிடித்தனர் என்றோ சொல்ல முடியுமா? கடவுள் போல் அவைகள் அநாதி என்றே கூறுவார்கள். அதைப் போல் ஆதியில் இந்துமதத்தைச் சார்ந்த முனிவர்கள் தேவ நெறியினை உணர்ந்து அவ் வேதத்தில் உறுதியுடன் கூறப்பட்ட மெய்ஞானதத்துவங்களைப் பலபடியில் வெளியிட்டாலும், அவர்கள் இம் மதத்தை ஏற்படுத்தியவர்கள் அல்ல. அதனால் இம்மதத்தை ஒரு மனிதரின் பெயரிட்டழைப்பதில்லை. ''யஸ்ய நிச்வஸிதம் வேதா:'' என்றபடிக்கு இவ்வேதங்கள் திருமாலின் மூச்சுக் காற்று என்றுதான் கூறுவார்கள். நம்மால் எந்த விதத்திலும் அறிய இயலாத-ஆனால் அறிய வேண்டிய கருத்துக்களைக் கூறுவதால் அதற்கு வேதம் என்ற பெயர் ஏற்பட்டது. ஒருவருக்குத் தன் தாய் நாட்டிலும் தாய்மொழியிலும் தன் மதத்திலும் வேற்றுமை கலவாத பற்றுதல்இருக்க வேண்டும். அது இல்லாவிடில் அவனை உலகமே ஏற்காது, அவனும் தன்னையே ஒரு மனித இனத்தைச் சேர்ந்தவன் எனக் கூறிக் கொள்ள முடியாது. மலைக்கு ஆறுகள், கலைக்கு இனிமை, தலைக்குக் கண், நிலைக்கு அன்பு என்பதுபோல் மனிதனுக்கு பிணக்கற்ற மதப்பற்று ஏற்பட்டிருக்க வேண்டும். ஆகத் தோன்றாத் தோன்றலாகிய இந்துமதம் இந்தியாவின் பெருமையை உலகெங்கும் கோவிலுக்குக் கோபுரம் போல் காட்டி நின்று அனைத்துமதத்தையும், தாய்குழந்தைகளைத்தழுவுவதுபோல், தழுவிப் பரந்த நோக்குடன் விளங்குகிறது. ஆனால் அந்த வேதம் எண்ணற்றவை. ஆழ்ந்து சிந்தித்து முடிவு கட்ட வேண்டிய அருமையான மெய்ஞான கருத்துக்கள் கொண்டவை. அவைகள் மனிதனது இகம்-பரம் என்ற இரண்டு நிலைகளுக்கும் வழி வகுத்துத் தருகின்றன.

இத்தகைய வேதாந்தத்தை ஓர் எளிய கலையாக்கியும், அதற்கு, மக்கள் வழங்கும் தாய்மொழியில், எளிய உரைகள் எழுதியும் உதவிய ஒரு பக்திப் பண்ணையே நம் தமிழ்நாடு. வடநாடு, தத்துவ ஞானத்தின் சிறப்பிடமாய் விளங்குகையில் தென்னாடு அந்த ஞானக் கருத்துக்களின் ஒளி படரும் பக்திப் பண்ணையாய் விளங்கும். எளிய, இனிய, ஆனால் ஆழ்ந்த கருத்துக்களை மயர்வற மதி நலம் அருளப்பட்ட ஆழ்வார்களாகிய செந்தமிழ்ச் செல்வர்கள் அமுத வெள்ளமெனப் பாசுரமாக வெளியாகும் பொழுது கேட்பவர், சிந்திப்பவர் மனம் மயங்கும்; நெஞ்சு இடிந்து உகும்; கண் சுழலும்; கால் ஆடும். இவைகளே ''இன்சொலால் ஈரமிலாஇப் படிறிலவாம் செந் தமிழ் கண்டார வாய்ச் சொல்'' என அருளிய திருவள்ளுவர் திருவாக்குக்கு இலக்கியமாய் விளங்கும்.

தென் தமிழ் நாட்டிலே தேன் மதுரத் தமிழிலே பக்தி மணம் கமழ ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடி அருளிய பாசுரங்களில் பண்பட்ட தமிழ் நன்னூல் துறை இலக்கிய அமைதிகளும் இலை மறை காய்களென விளங்கும். இவர்களே செந்நெல் கவரி வீசும் செழுநீர்ப் பண்ணையாம் தமிழ் நிலத்தைப் பண்படுத்தித் திருவருள் செந்நெல்களை உதிர வைத்த பச்சைக் கிளிகளாவார்கள். உதாரணமாகத் தொல்காப்பியத்தில் உவமை அணியை விளக்கும் பொழுது ''வினை பயன் மெய்யுரு வென்ற நான்கே வகை பெறவந்த உவமைத் தோற்றம்'' என்று கூறுகிறார். இச்சூத்திரத்திற்கு இலக்கியம் போல் ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை 4-ம் பாசுரத்தில் ''உருவம் போல் மெய்கறுத்து'' என்ற இடத்தில் மெய்யுவமையையும், உருவுமையையும், ''ஆழிபோல்மின்னி'' என்ற இடத்தில் வினையுவமையையும், ''சரமழைபோல்'' என்ற இடத்து பயனுவமையையும் உட்கிடையாகக்காட்டி ஒரே செய்யுளில் மூன்று உவமையையும் அமைத்த அழகினை உன்னிப்படிக்கும் பொழுது இவர்களுக்குப் பழம் தமிழ் பாடல்களில் எத்துணை மதிப்பு! எத்துணை புலமை! என்பது விளங்குமன்றோ. இவர்கள் திருமாலுடைய அரும் கலியாண குணங்களிலும், அவனது திவ்விய மங்களவிக்கிரகம் எனவும் சுபாச்ரயம் எனவும் அழைக்கப்படும் வடிவழகு வழியும் பிம்பங்களிலும் ஆழ்ந்திருந்து, படிப்போர்

வித்துவான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை
என். எஸ். தாதாசார்யர்

அனைவரையும் அவன் பக்தியிலே ஆழ வைப்பவர்களானதினால் இவர்களை ஆழ்வார்கள் எனச் செல்வமாக ஸ்ரீ வைஷ்ணவ உலகம் அழைக்கும். இவர்களுக்கு ஆதிபக்தர்கள் - மாலுகந்த ஆசிரியர் - திவ்விய சூரிகள்-பாலேய் தமிழர்கள் - பட்டர்கள் - இருந்தமிழர்கள் என்றெல்லாம் சிறப்பான பெயர்கள். இவர்களின் பிறப்பைப் பற்றி முன்பே ஸ்ரீபாகவதத்தில் தெளி

வாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்கள் அருளிய அமுத மொழிகளைத் தான் நாலாயிரம் எனவும், திவ்விய பிரபந்தங்கள் எனவும், இவர்களின் ஈரச்சொற்கள் பட்டு ஜ்வலிக்கும் திருக்கோயில்கள் அமைந்த புண்ணியத் தலங்களைத் திவ்விய தேசம் எனவும் அழைப்பார்கள்.

## இன்பப் பிரபந்தங்கள்

பிரமாணம் - பிரமாதா - பிரமேயம் அதாவது நெறி-நெறியாளர்-குறி என்றுச் சமய நூல்களில் அழைக்கப்படும் ஒருங்கிணைந்த சமய தத்துவத்துக்கு நேரிடை விளக்கமாக இம்மூன்று திவ்வியங்களும் அமைந்திருப்பதுடன் பொருந்தியுமிருக்கின்றன. திவ்வியப் பிரபந்தங்கள் என்ற சொல்லுக்கு எம்பெருமானைப் பற்றி நாம் நிச்சலும் அறிந்து உய்யவேண்டிய அருமையான உண்மைக் கருத்துக்கள் நன்றாகச் சிதறாமல் சேர்த்து வைக்கப்பட்ட ஒரு பொற்குடம் எனலாம். அல்லது மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாத கண்டவரும், விண்டவரும் இல்லை எனக் கூறும்படியான, மறைகளில் நிலங்களும் தெளியாத சீரிய எம்பெருமான் பெருமைகளையும் சிறப்பாக அவனது எளிமைப் பண்புகளையும் திருமகளுடன் கலந்து பரிமாறும் பண்புடன் இந்நூல்களில் ஒருங்கிணைப்பாக அமைக்கப்பட்டதாலும் இந்நூல்களுக்குத் திவ்வியப் பிரபந்தங்கள் எனத் திருப்பெயர் ஏற்பட்டது. எவ்வாறு எல்லையற்ற பரம்பொருளான பகவான் யசோதையின் கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுப்பட்டு கிடந்தாரோ அவ்வாறு இந்தப் பிரபந்தங்கள்மூலம் ஓதுவார்—பாடுவார்—பக்கம் நின்று கேட்பார்—பார்ப்பார் அனைவர் உள்ளத்திலும் அவனைக் கட்டிப் போட்டு விடலாம் என்பர்.

இந்நாலாயிரப் பிரபந்தத்தில் பாசுரங்களின் எண்ணிக்கையை நிரப்பிக் கூறுவதுண்டு. சில எண்ணிக்கைகள் குறையவும் கூறுவதுண்டு. பெரும்பாலும் இப்பிரபந்தங்களில் வரும் கடவுள் பழம் தமிழ் நாட்டில் முல்லை நிலக் கடவுளாகப் போற்றிக் கூறப்பட்ட கண்ணபிரானேயாகும். முல்லை நிலக் கண்ணன். முத்தமிழ்க் கண்ணன். நப்பின்னை மணாளன் கண்ணன். குடமடுத்துக் கூத்துக் காட்டிய கண்ணன். ஆண்டாள் அகத்தமர்ந்த கண்ணன் — என்றவாறு

(35-ம் பக்கம் பார்க்க)

# ★ விநாயகர் வடிவ விளக்கம் ★

இந்தியாவில் உள்ள மதங்கள் அனைத்திற்கும் பொதுவாய் எழுந்தருளியிருக்கும் தெய்வம் விநாயகர். இத்தெய்வத்தின் துணை கொண்டு தத்தம் தெய்வத்தை மக்கள் வணங்குகின்றனர். சைவர், வைணவர், சாத்தர், ஜைனர், பௌத்தர் ஆகிய அனைவரும் வழிபடும் தெய்வம் விநாயகர். விநாயகப் பெருமான் எல்லா ஆலயங்களிலும் எழுந்தருளியுள்ளார். அவருக்கென்று அமைந்துள்ள ஆலயங்களோ அளவிட முடியாதவை. சில இடங்களில் மற்ற ஆலயங்கள் இல்லாவிடினும் விநாயகர் ஆலயம் கண்டிப்பாக இருக்கும்.

விநாயகர் வழிபாடுதான் கடைபிடிப்பதற்கு மிகச் சுலபமானது. தாற்காலிகமாக கணபதியை மண்ணில் பிடித்து வைத்து வணங்குவது




நெடுங்காலத்து வழக்கம். அதிகாலையில் வீட்டு வாயிலில் பிள்ளையாரை சாணத்தில் பிடித்து வைத்து பல இடங்களில் வணங்குகிறார்கள். அவ்வப்போது தேவைப்படும் ஆராதனைக்கு மஞ்சள் தூளிலும் அரிசி மாவிலும் உருண்டையாகப் பிடித்து வைத்து அதில் அருகம்புல்லை செருகி வைத்தால் விநாயகக் கடவுள் எழுந்தருளிவிடுகிறார்.

## மூர்த்தி விளக்கம்

**யானை முகத்தான்:** ஓம் என்ற பிரணவத்தின் வடிவமாக அமைந்துள்ளது விநாயகரின் திருஉருவம். யானையின் காது, தலை, துதிக்கை ஆகிய மூன்றும் சேர்ந்து ஓம் என்பதாகிறது. யானை முகத்துடைய கணபதி ஓங்கார மூர்த்தியாகத் திகழ்கிறார். யானை எல்லா உயிர்களிலும் பெரியது. பேராற்றல் கொண்டது. அமைதியான குணமும் உடையது. அது போலவே விநாயகரும் தனக்குமேல் ஒரு தலைவன் இல்லாத தனிப்பெரும் நாயகராகவிளங்குகிறார். (வி=இல்லை; நாயகன்=தலைவன்.) சர்வ வல்லமையும் படைத்த அவர் சித்தம் தெளிவது காரணமாகப் பெறப்படும் மேலான சாந்தி நிலையே ஆன்மீக சாதனையின் முதிர்ந்த நிலையாகும்.

**திருஉடல்:** விநாயகருக்கு உடல் இடுப்புக்குக் கீழ் மனிதனைப் போலவும், இடுப்புக்கு மேல் தேவர்களைப் போலவும், தலை யானையினுடையது போலவும் அமைந்துள்ளது. பொதுவாக மனிதன் தெய்வத்தன்மை பொருந்தியவன். அவன் மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்புலன்களுக்கு அடிமையாகையில் மனிதத் தன்மையை இழந்து மிருகத் தன்மை கொள்கிறான். கணபதி தனது கைகளில் யானையை அடக்கும் ஆயுதங்களை ஏந்தியிருப்பது மனிதன் தனது தெய்வீகத் தன்மை வாய்ந்த பகுத்தறிவால் ஐம்புலன்களை அடக்கி ஞானத்தைப் பெற வேண்டுமென்பதற்காகத்தான்.

பருத்த திருமேனிக்கு ஒப்ப லம்போதரம் அல்லது பேழை வயிறு உடையவன் பிள்ளையார். வீட்டில் உள்ள பொருட்களை பேழையில் போட்டு வைப்பது வழக்கம். விதவிதமான உணவுகளையெல்லாம் தம் பேழை வயிற்றில் போட்டுக் கொள்கிறார் விநாயகர். அவைகளனைத்தையும் தாங்கிப் பிடிப்பதற்கு பாம்பு ஒன்றை கச்சையாக வயிற்றின்மேல் கட்டிக் கொண்டிருக்கிறார். அண்டங்கள் யாவும் விநாயகரிடத்து அடங்கிக் கிடக்கின்றன. தன்னிடத்து தங்கியுள்ள அண்டங்களனைத்தையும் தன் சக்தியால் தாங்கிக் கொண்டுள்ளார். பாம்பு சக்தியின் சின்னம். பாம்பைக் கொண்டு தன் வயிற்றைக் கட்டியிருப்பது இதை விளக்குகிறது.

ஓம் என்ற பிரணவத்திலிருந்து வேதங்கள் தோன்றின. அப்பிரணவமே எல்லா தேவதைகளுக்கும் பிறப்பிடம். ஓம் என்ற பிரணவத்தை நாதப் பிரம்மம் என்பர். ஜைன மதமும் புத்த மதமும் பிரணவத்தை மிகவும் புனிதமாகக் கருதுகின்றன. கிருத்துவ பிரார்த்தனைகளில் கூறப்படும் 'ஆமென்', ஆமின்', என்னும் சொற்கள் பிரணவ மந்திரத்தின் ஒலியை ஒத்திருக்கின்றன. இப்பிரணவ சொரூபமாகத் திகழ்பவர் தான் விநாயகர். எல்லா எழுத்துக்களுக்கும், ஓசைகளுக்கும் மூலமாகவும், பிறப்பிடமாகவும் அவைகளின் முடிவிடமாகவும் விளங்குவது ஓம் என்ற பிரணவம். பிரணவம் தோற்றம் இல்லாதது. விநாயகரும் தோற்றம் இல்லாதவர். தோற்றம் உண்டானால் மறைவு உண்டு. முதலும் முடிவும் இல்லாத முழு முதற் கடவுள் விநாயகர். தேவரும் எவரும் ஏற்றும் தனிப் பெருந்தெய்வம் விநாயகக் கடவுள்.


டாக்டர். ஜி. கார்த்திகேயன், M.B. B.S.,
ஆற்காடு.

ஏகதந்தன் : விநாயகரை ஏகதந் தன் என்றும் அழைப்பர். ஒற்றைத் தந்தம் உடையவர் என்று பொருள். வியாசர் மகாபாரதம் சொல்ல விநா யகர் அதை எழுதிக் கொண்டிருந் தார். இடையில் எழுத்தாணி உடைந்துவிட்டது. விநாயகர் தமது தந்தங்களில் ஒன்றை ஒடித்து பார தத்தை எழுதி முடித்தார் என்று புராணம் கூறுகிறது. ஆனால் இது உயர்ந்த கருத்தை உணர்த்துகிறது. யானையின் உடல் உறுப்புகளிலேயே அதன் தந்தம்தான் மிகவும் உயர் வானதும் அழகானதும் ஆகும். ஒரு உயர்ந்த பணிக்காக தமது தந்தத் தையே ஒடித்து அர்ப்பணித்தது, பொது மக்களுக்கு பயன்படும் சிறந்த காரியங்களுக்காக மனிதன் எதையும் தியாகம் செய்ய தயாராக இருக்க வேண்டும் என்பதை எடுத்துக் காட்டு கிறது.

ஐங்கரன் : பொதுவாக தெய்வங் களுக்கு நான்கு கைகள் இருப்பதாகக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. மனிதர் களைவிட அவர்கள் ஆற்றல் மிக்கவர் என்பதை பல கைகள் உடையதன் மூலம் உணர்த்தியிருக்கிறார்கள். தும் பிக்கை உட்பட விநாயகருக்கு ஐந்து கரங்கள் உள்ளன. உயர்த்தி பிடித் திருக்கும் இரண்டு கைகளில் அங் குசம், பாசம் என்னும் இரண்டு ஆயுதங்களை ஏந்தியுள்ளார். யானைப் பாகன் அங்குசத்தைக் கொண்டு யானையை வேண்டியவாறு நடத்து கிறான். வேலையற்றபோது கயிறு அல்லது பாசத்தைக் கொண்டு அதைக் கட்டி வைக்கிறான். விநாய கரும் எல்லா உயிர்களையும் நல்வழி யில் நடத்துகிறார். அதற்கு அறிகுறி யாக இருப்பது அங்குசம். தீயவர் களை பாசத்தைக்கொண்டு துன்பத்துக் குள்ளாக்குகிறார். இன்னும் இரண்டு கைகளில் தந்தமும் மோதகமும் இருக்கின்றன. தனது தந்தங்களில் ஒன்றை ஒடித்து கையில் வைத்துள் ளது கல்வி, ஞானம், தியாகம் ஆகிய வற்றின் அவசியத்தை அறிவுறுத்து கிறது. மோதகம் கணபதிக்கு பிடித்த உணவு. உணவு இல்லாது யாரும் உயிர் வாழ முடியாது. நல்ல உணவு உண்டு நல்வாழ்வு வாழவும், அறிவைப் பெருக்கவும் மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதை இது உணர்த்து கிறது. நீண்ட தும்பிக்கை ஓர் கும் பத்தை ஏந்தியுள்ளது. இறைவனின் எல்லையற்ற கருணை, ஞானம், ஏகத் துவம் ஆகியவற்றை நீர் நிறைந்த பாத்திரம் விளக்குகிறது. வழியி லுள்ள விக்கினங்களை தும்பிக்கை யால் அகற்றி செல்லும் தன்மை யுடையது யானை. அன்பர்களின் ஆன்மீகப் பாதையில் குறுக்கிடும் விக்கினங்களை அகற்றி ஞானத்தை அருளுபவர் விக்கினேஸ்வரர் என் பதின் தத்துவம் தும்பிக்கை ஆகும்.

யோக சொரூபம் : கர்ம யோகம், ராஜ யோகம், பக்தி யோகம், ஞான யோகம் ஆகியவைகளின் சொரூப மாக விநாயகர் திகழ்கிறார். கைகளில் உள்ள ஆயுதங்கள் கர்ம யோகத்தை யும், ஒடிந்த தந்தத்தை ஏந்தியுள்ள கரம் ஞான யோகத்தையும் மோத கத்தைவைத்துள்ளகை, பக்தியோகத் தையும், வாசுகியை அரையில் அணிந்திருப்பது ராஜயோகத்தையும் குறிப்பிடுகின்றன. நான்கு யோகங் களாலும் அடையப் பெறும் பரம் பொருள் ஒன்றே என்ற தத்துவத்தை விநாயகரின் திருவுருவம் உணர்த்து கிறது.

மூஷிக வாகனம் : ஒவ்வொரு தெய் வத்திற்கும் ஒவ்வொரு வாகனம் உண்டு. விநாயகருக்கு பெருச்சாளி வாகனமாகும். எலி எல்லா பொருள் களையும் நாசம் செய்யக் கூடியது. அது ஆணவமும் அறியாமையின் உருவமாகும். விநாயகர் மூஷிகத் தைத் தன் திருவடியில் வாகனமாகக் கொண்டுள்ளது உயிர்களின் ஆண வத்தையும், அறியாமையையும் அடக்கி ஆட்கொள்பவர் என்பதைக் குறிக்கிறது.

பக்தர்களுக்கு எளியவராகவும், மத வேறுபாடுகள் கடந்து எல்லா மதத்தினருக்கும் உரிய தெய்வமாக வும், சுலபத்தில் அவரை உருவாக்கி எளிதில் வழிபட உரியவராகவும் திகழ்கிறார் விநாயகப் பெருந்தகை. அவருடைய உருவமும் பெரிது; மகி மையும் பெரிது; கருணையும் பெரிது; திருவுருவத்தின் தத்துவமும் பெரிது. முழு முதற் கடவுள், மூலாதார மூர்த்தி, கருணைப் பெருங்கடல், கண நாதர், விக்கினேஸ்வர விநாய கரை வழிபடுபவர்களுக்கு எடுத்த காரியங்கள் எல்லாம் எளிதில் முடி யும் என்பது கோட்பாடு.



# வேத உப அங்கங்கள் - உபவேதங்கள்

வேத உப அங்கங்களாகிய 1. மீமாம்ஸை, 2. நியாயம், 3. புராணம், 4. தர்ம சாஸ்திரம் இவைகளைப் பற்றியும், உப வேதங்களாகிய 1. ஆயுர் வேதம், 2. அர்த்த சாஸ்திரம், 3. தனுர் வேதம், 4. கந்தர்வ வேதம் ஆகிய இவைகளைப் பற்றியும் ஈண்டு இக்கட்டுரையில் ஆராய்வோம்.

**வேத உப அங்கங்கள்**

வேதங்கள் நான்கு. வேத அங்கங்கள் ஆறு. வேத உப அங்கங்கள் நான்கு. ஆக இப்பதினன்கும் நாம் நமது சமய அநுஷ்டான சகாசார தர்ம நெறியில் நின்று தூய வாழ்க்கையைக் கடைப் பிடித்து மேலாம் பெருநிலையையடையும் நெறி முறைகளை விளக்கிக் காட்டும் சாதனங்களாக இருப்பவையாகும். எனவே இப்பதினன்கும் தர்ம சாதனங்களாகும். இவைகளுள் வேத உப அங்கங்கள் நான்கினைப் பற்றிக் கீழே நன்கு விளக்குவோம்.

1. 'மீமாம்ஸை' என்பது வேதத்தின் இருபகுதிகளாகிய 'பூர்வ காண்டம்', 'உத்தர காண்டம்' என்பவைகட்கு அர்த்த நிர்ணயம் செய்வதாகும். இது 'பூர்வ மீமாம்ஸை', 'உத்தர மீமாம்ஸை' என இரு வகைப்படும்.

'பூர்வ மீமாம்ஸை' வேதத்தின் பூர்வ காண்டமாகிய கர்ம காண்டத்திற்கு அர்த்த நிர்ணயம் செய்கின்றது. இப்பூர்வ மீமாம்ஸ ஸூத்திரங்களை இயற்றியவர் 'ஜைமினி' என்பவர். இதற்கு பாஷ்யம் செய்தவர் 'சபரஸ்வாமி' என்பவர். இதற்கு வார்த்திகம் 'குமாரிலபட்டர்' என்பவர் செய்தார். பூர்வ மீமாம்ஸையில் ஆயிரம் அதிகரணங்கள் இருக்கின்றன. அதனுற்றான் இதற்கு 'ஸஹஸ்ராதிகரணி' என்னும் சிறப்புப் பெயர் உண்டாயிற்று. ஒரு 'அதிகரணம்' என்றுல் ஒரே விஷயத்தைப் பற்றி விசாரம் செய்யும் பல ஸூத்திரங்களைக் கொண்ட பகுதியாகும். பல வகையான சந்தேகங்களையும், குயுக்திகளையும் போக்கி வேதத்திலுள்ளவைக்கு அர்த்த நிர்ணயம், அதாவது முடிவான தீர்மானத்தைச் செய்வது இது.

'உத்தர மீமாம்ஸை' வேதத்தின் உத்தர காண்டமாகிய உப நிஷதங்களுக்கு அர்த்த நிர்ணயம் செய்கின்றது. உத்தர மீமாம்ஸை ஸூத்திரங்களை இயற்றியவர் வியாச மகிரிஷி. இது 'பிரம்ம ஸூத்திரம்' என்றும் சிறப்பாகச் சொல்லப்படும். இதற்கு 'பாதராயண ஸூத்ரம்' என்ற பெயரும் உண்டு. உபநிஷதங்களிலுள்ள தத்துவங்களின் சாரத்தை நமக்குத் திரட்டித் தருகின்றது. உத்தர மீமாம்ஸையாகிய பிரம்ம ஸூத்திரத்தில், 555 ஸூத்திரங்கள், 192 அதிகரணங்கள், நான்கு அத்தியாயங்கள் உள்ளன. ஒவ்வொரு அத்தியாயமும் நான்கு பாதங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இதற்கு ஆதி சங்கரர் பாஷ்யமும், ஸுரே சுவராச்சாரியார் (மண்டன மிசிரர்) வார்த்திகமும் செய்திருக்கிறுர்கள்.

2. 'நியாய' சாஸ்திரம் கௌதம ரிஷியால் செய்யப்பட்டது. கணதர் என்பவரும் ஒரு நியாய சாஸ்திரம் செய்திருக்கிறுர். அதன் பெயர் 'வைசேஷிகம்'. நாம் எவ்வாறு நமது சிந்தனு சக்தியைப் பயன்படுத்திச் சிந்தித்தல் வேண்டும் என்பதை எடுத்துப் புகட்டுவது நியாய சாஸ்திரம்; எதைச் சிந்தித்தல் வேண்டும் என்பதை வரையறுத்துப் புகட்டுவது வைசேஷிகம். நியாய சாஸ்திரப்படி நான்கு பிரமாணங்கள் உள்ளன. அவையாவன: 1. பிரத்யக்ஷப் பிரமாணம், 2. அநுமானப் பிரமாணம், 3. உபமானப் பிரமாணம், 4. சப்தப் பிரமாணம் (வேதப் பிரமாணம்). இவைகளுள் அநுமானப் பிரமாணம் நியாய சாஸ்திரத்தில் பிரதான இடம் பெறுகின்றது. வைசேஷிகத்திலும் அப்படியே அநுமானத்தைப் பிரதானமாக் கொண்டு ஆராயப்படுகின்றது. தெரியாத ஒன்றைத் தெரிந்து கொள்ளுவது அநுமானப் பிரமாணமாகும். இது கண்ட வெள்ளத்தைக் கொண்டு காணு மழையை அறிவது போலவாகும். பரமாத்ம ஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம் இவை நமது கண்களுக்குத் தெரிவதில்லை. ஆனுல் இவைகளை அநுமானப் பிரமாணங்கள் மூலம் தெரிந்து கொள்ள வேண்டும். பஞ்ச லோகத்தினுல் செய்யப்பட்ட ஒரு விக்கிரகத்தைப் பார்க்கிறேம். அதைச் செய்தவன் நம் கண்ணுக்குத் தெரியாவிட்டால் செய்தது பொய்யென்று சொல்லலாமா? அதைச் செய்தவன் ஒருவன் நிச்சயமாக இருக்கத்தான் வேண்டும். இது அநுமானப் பிரமாணம். வேத வாக்கியம் 'ஈசன் எங்கும் நிறைந்துள்ளான்' என்கிறது. இதை அநுமானத்தால் ஸிந்தாந்தம் செய்வது நியாய சாஸ்திரம்.

சித்தாந்தி இ. சம்பந்தாச்சாரி,
கோவில்பதாகை.

3. 'புராணம்' என்னும் சொல்லுக்கு பழையது என்று பொருள். எனவே பழைய விஷயங்களைக் கொண்டுள்ள நூல் புராணம் எனப்படுகின்றது. நைமிஸாரண்யத்தில் 'ஸூதர்' என்னும் முனிவர் சொன்ன கதைகளை வியாச மகரிஷி புராணங்களாகத் தொகுத்தார். புராணங்களிலுள்ள விஷயங்கள் பழையவைகளாக இருந்தாலும், அவைகளைக் கேட்டாலும், படித்தாலும் புதியவைகள் போன்று புலப்படும். பாலர் முதல் விருத்தர் வரை, பண்டிதன் முதல் பாமரன்வரை எல்லோருக்கும் சமய அறிவையும், அறநெறியையும், ஆத்ம ஞானத்தையும் புகட்டும் கருத்துமிகு கதைகளைக் கொண்டு விளங்குவது புராணங்கள். 'புராணம் பஞ்ச லக்ஷணம்' என்பதற்கேற்ப புராணத்தில் ஐந்து லக்ஷணங்கள் அமைந்துள்ளன. அவை 'ஸர்க்கம்', 'விஸர்க்கம்', 'பிரஜாபதி சிருஷ்டிலயம்', 'மன்வந்தரம்', 'வம்சம்'

எனப்படும். வியாசரால் தொகுக்கப் பட்ட புராணங்கள் மொத்தம் பதி னெட்டு ஆகும். இவைகள் ஸத்வம், ரஜஸ், தமஸ் எனும் முக்குணங் களுக்கு உரியவைகளாகப் பிரிக்கப் பட்டு இருக்கின்றன. ஸத்வ குண புராணங்கள் விஷ்ணுவைப் பற்றிய தாகும். அவை ஆறு. ரஜோ குண புராணங்கள் பிரம்மாவைப் பற்றிய தாகும். அவை ஐந்து. தமோ குண புராணங்கள் சிவனைப்பற்றியதாகும். அவை ஏழு.

விஷ்ணுவைப்பற்றிய ஸத்வ குண புராணங்கள் 1. விஷ்ணு புராணம், 2. பாகவதம், 3. நாரதீயம், 4. காருட புராணம், 5. பத்ம புராணம், 6. வராஹ புராணம், ஆகியவைகள்.

பிரம்மாவைப்பற்றி ரஜோ குண புராணங்கள் 1. பிரம்ம புராணம், 2. பிரம்மாண்ட புராணம், 3. பிரம் மவைவர்த்த புராணம், 4. பவிஷ்ய புராணம், 5. வாமன புராணம் ஆகிய வைகள்.

சிவனைப்பற்றிய தமோ குண புரா ணங்கள் 1. சிவ புராணம், 2. லிங்க புராணம், 3. ஸ்கந்த புராணம், 4. மார்க்கண்டேய புராணம், 5. அக்னி புராணம், 6. மத்ஸ்ய புராணம், 7. கூர்ம புராணம் ஆகியவைகள்.

இப்பதினெட்டுப் புராணங்களும் நான்கு லக்ஷம் கிரந்தங்களைக் கொண் டுள்ளது. ஒரு கிரந்தம் என்பது முப்பத்திரண்டு எழுத்துக்களைக் கொண்டதாகும். இப்புராணங்களி லுள்ள கதைகள் எக்காலத்திலுள்ள தத்துவங்களுக்கு அருமையான உரு வகங்கள் ஆகின்றன. பதினென் புராணங்களின் சாராம்சமாக இருப் பது இரு விஷயங்களே. அவை பிற ருக்கு உதவினல் புண்ணியம் உண் டாகும்; துன்புறுத்துவதால் பாபம் வரும் என்பவைகளே. இதனைக் கீழ் வரும் சுலோகம் தெளிவுபடுத்து கின்றது.

'' அஷ்டாதச புராணேஷு வ்யாஸஸ்ய
வசனத்வயம்।
பரோபகார: புண்யாய பாபாய பர
பீடனம் ॥''

4. 'தர்ம சாஸ்திரம்' எனப்படு வது வேத பூர்வமான நமது அனுஷ் டானத்திற்குச் சிறந்த உபயோக மான விஷயங்களை யெடுத்துச் சொல் லும் சாஸ்திரமாகும். இது 'ஸ்மிருதி' என்றும் சொல்லப்படும். 'ஸ்மிருதி' என்றால் நினைவு என்று பொருள். வேதங்களின் பற்பல பகுதி கள் பற்பல ரிஷிகளால் அவர்களின் ஆன்மீக ஞான தத்துவ தரிசனத் தால் கண்டு பிடிக்கப்பட்டவை யாகும். எனவே வேதத்தை-வேத மந்திரத்தை, ரிஷிகளாகிய முனிவர் கள் என்று சொல்லப்படும். இதை ''ஸ்ருதிம் பஸ்யந்தி முனய:'' எனும் வாக்கியத்தால் அறியலாம். அவ் வாறு ரிஷிகள் கண்டதினுலுண்டான அனுபவத்தால் ஏற்பட்ட நினைவு தான் 'ஸ்மிருதி' எனப்படும். எனவே ஸ்மிருதிகளெல்லாம் வேத மூலமாக வந்தவையாகும். அவைகள் பற்பல காலங்களில் பற்பல ரிஷிகளால் செய்யப்பட்டவையாகும். அவை யனைத்தும் வேதங்களின் பொருள் வழுவாமல் விளக்கிச் சுலபமாக நமது அனுஷ்டான நெறி முறைகளுக்கு மிக உபயோகமான விஷயங்களையே கூறுகின்றன. அவைகளுள் பிரசித்த மான சில ஸ்மிருதிகள் கீழே குறிப் பிடப்படுகின்றன.

1. மனு ஸ்மிருதி
2. யஜ்ஞவல்க்ய ஸ்மிருதி
3. அத்ரி ஸ்மிருதி
4. விஷ்ணு ஸ்மிருதி
5. ஹாரீதர ஸ்மிருதி
6. உஸனஸ ஸ்மிருதி
7. அங்கிரஸ ஸ்மிருதி
8. யம ஸ்மிருதி
9. காத்யாயன ஸ்மிருதி
10. ப்ருஹஸ்பதி ஸ்மிருதி
11. பராஸர ஸ்மிருதி
12. வ்யாஸ ஸ்மிருதி
13. தக்ஷ ஸ்மிருதி
14. கௌதம ஸ்மிருதி
15. வஸிஷ்ட ஸ்மிருதி
16. நாரத ஸ்மிருதி
17. ப்ருகு ஸ்மிருதி
18. ஸங்க ஸ்மிருதி

இவைகளுள் பெரும்பாலானவை இப் பொழுது கிடைப்பதற்கு அரிதாகி விட்டன. இவைகளுக்கு விளக்கங் கங்களாகப் பிற்காலத்தில் கீழ்க் காணும் சிறந்த சாஸ்திரங்கள் அமைந்துள்ளன. அவையாவன: 1. ஸ்மிருதி கல்பதரு, 2. ஸ்மிருதி சந்த்ரிகா, 3. சதுர்வர்க்க சிந்தா மணி, 4. ஸ்மிருதி ரத்னகரம், 5. தர்ம ரத்னம், 6. நிர்ணய ஸிந்து.

ஸ்மிருதிகளுள் மிகப் பழமை யானது மனு ஸ்மிருதியே யாகும். இது 'மானவ தர்மசாஸ்திரம்' எனப் படும். இதிலுள்ள பன்னிரண்டு அத்தி யாயங்களில் மனித சமூகம் முழு வதற்கும் தேவையான எல்லா விதி முறைகளும் அடங்கியிருக்கின்றன. இதனுடைய கருத்துப் புகழ் அயல் நாடுகளிலும் ஆதாரமாகக் கருதப் படும் அளவிற்குப் பரவியுள்ளது. எனவே இது ஒரு சிறந்த தர்ம சாஸ் திரமாகும். பொதுவாக ஸ்மிருதி களுள் மனு, யஜ்ஞவல்க்யர், பரா சரர் ஆகியோரது ஸ்மிருதிகள் முக் கியமானவையெனக் கருதப்படுகின் றது. ஸ்மிருதிகள் 56 வரை இருப்ப தாகக் கூறப்படுகின்றன. ஹிந்துக் களின் சட்டங்களுக்கு ஆதாரமாக விளங்குவது ஸ்மிருதிகளே. ஸ்மிருதி களில் சமுதாயம் ஒழுங்காக நடப் பதற்கு வேண்டிய நியமயங்கள், விதி முறைகள் எல்லாம் விஸ்தாரமாக விளப்பட்டுள்ளன. நமது கடமைகள், தர்மங்கள், ஆசார விசாரங்கள் ஆகியவைகள் ஆராய்ந்து கூறப்பட் டுள்ளன. மனித குலம் ஸத்ய, தர்ம, சதாச்சாரப் பெரு நெறியில் சிறந்து விளங்க விதிமுறைகளை வரையறுத் துக் கூறும் தர்ம சாஸ்திரங்களே ஸ்மிருதிகளாகும். தர்ம ஸூத்திரங் களில் முக்கியமானவை ஆபஸ்தம்ப ஸூத்ரம், போதாயன ஸூத்ரம், கௌதம ஸூத்ரம், ஹிரண்ய கேசி ஸூத்ரம் என்பவையாகும்.

உலகத்திலுள்ள அனைத்தினும் பெரியது கர்மமே. தர்மத்தின் மீது தான் சத்தியம் நிலைத்திருக்கின்றது.

'' தர்மோ ஹி பரமோ லோகே
தர்மே ஸத்யம் ப்ரதிஷ்டிதம் ''
(அயோ. கா. 21, 41)

என வால்மீகி மகரிஷி ராமாயணத் தில் கூறியுள்ளார். மற்றும் தர்மமே உலகின் சாரம் என்பதையும் அவர் கீழ்வரும் சுலோகத்தால் விளக்கு கிறார்.

'' தர்மாதர்த்த: ப்ரபவதே தர்மாத்
ப்ரபவதே ஸுகம்।
தர்மேண லபதே ஸர்வம்
தர்மஸாரமிதம் ஜகத் ||
(ஆரண். கா. 9, 30)

எனவே, தர்மத்திற்கும் ஸத்தியத் திற்கும் முதலிடமும் முக்கியத்துவ மும் அளித்து வாழ்ந்த, உபதேசித்த நம்முன்னோர்களாகிய ரிஷிகளின் வழி வந்த நாமும் அவைகளை நம் வாழ்க் கையில் கடைப்பிடித்து நம் வருங் கால சந்ததிகளையும் அந்த நன்னெறி

(27-ம் பக்கம் பார்க்க)




# மகளிரும் நாணமும்

உலகில் இறைவனால் படைக்கப்பட்ட உயிரினங்கள் அனைத்திலும் மானிடன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான். இறைவன் தன் சாயலாக மனிதனைப் படைத்துள்ளதாகக் கூறுவாருமுளர். இத்தகைய உயர் மனிதப் பிறவியில், ஆண், பெண் இரு பாலாரில் பெண் இனம் உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றப்படுகிறது.

“பெற்றதாயும் பிறந்த பொன்னாடும்
நற்றவ வானினும் நனி
சிறந்ததுவே”

“அன்னையும் பிதாவும் முன்னறி
தெய்வம்”

“தாயினும் சிறந்ததொரு
கோயிலுமில்லை”

என்றெல்லாம் தாய்மையின் சிறப்புக் கூறப்படுகிறது. இத்தகைய பெண்கள் உலக வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டிய பல நற்குணங்கள் உள்ளன. அவற்றுள் “நாணம்” என்னும் நற்குணம் தலைசிறந்த தொன்றாகும்.

**நாணம் உயிரினும் சிறந்தது**

மகளிர்க்கு கற்பு உயிரினும் சிறந்தது என்பது யாவரும் ஏற்றுக்கொள்ளும் உண்மையாகும். அத்தகைய கற்பு நெறி வழுவாமல் வாழ்வதற்கு நாணம் மகளிர்க்கு மிகவும் இன்றியமையாததாகும். இவ்வுண்மை ஓர் அண்மைக் கண்டுப்பிடிப்பு அல்ல. தமிழர் பண்பாட்டில் இவ்வுண்மை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே வலியுறுத்தப்பட்டுள்ளது.

“நாணால் உயிரைத் துறப்பர்
உயிர்ப் பொருட்டால்
நாண் துறவார் நாண் ஆள்பவர்”
[குறள் 1017]

என்று நாண் உடைமைப்பற்றி தமிழ் மறை கூறுகிறது. நாணத்தை விடாமல் ஒழுகுபவர் அந்த நாணம் சிதையாமலிருக்க உயிரையும் துறப்பர் என்றும், உயிருக்காக நாணத்தை நீக்கார் என்றும் கூறுமிடத்து நாணம் உயிரினும் சிறந்தது என்பதைத் தெளிவாக்குகிறது.

“உயிரினுஞ் சிறந்தன்று நாணே” என்னும் பழந்தமிழ் இலக்கண நூலான தொல்காப்பியத்தால், மகளிர்க்கு நாணம் உயிரினும் சிறந்ததென்பது அறியப்படுகிறது.

**நாணத்தின் பயன்**

இத்தகைய உயர்ந்த குணமான நாணத்தின் பயன் என்ன என்று ஆராயுமிடத்து அதன் உயர் வெளிப்படும். மகளிர் கற்பு நெறியுடன் வாழ்வதற்கு நாணமே வழி வகுக்கிறது. இவ்வுண்மையைத் தமிழ்ச் சங்க நூல்களில் ஒன்றாகிய இன்னா நாற்பது தெளிவுபடக் கூறுகிறது.

“குலத்துப் பிறந்தவன் கல்லாமை
இன்னா
நிலத்திட்ட நல்வித்து நாறாமைஇன்னா
நலத்தகையார் நாணாமை இன்னா—
ஆங்கின்னா
கலத்தல் குலமில் வழி”
[பாடல்-19]

என்று கூறும் இன்னா நாற்பது பாடலால் அறியலாம். இப்பாடலில் அழகுடைய மகளிர் நாணமின்றி ஒழுகுதல் துன்பத்திற்கு ஏதுவாகும் என்று கூறப்படுகிறது. நாணமின்மை துன்பத்திற்கு எவ்வாறு வழிவகுக்கும் என்று ஆராயுமிடத்து, நாணமின்மை கற்புநெறி வழுவ வழி வகுத்து, அதன் வழி ஆற்றொணாத் துன்பத்திற்கு வழி வகுக்கும் என்ற உண்மை புலப்படும். நாணமின்மை எவ்வாறு கற்பு நெறி வழுவ வழி வகுக்கிறது? நாணாமை என்பது பழி பாவங்களுக்கு அஞ்சாமைக்கு ஒப்பானதாகும். அவ்வாறு, நாணமின்மையால் பழி பாவங்களுக்கு அஞ்சாத மகளிர் கற்புநெறி தவறுவதில் வியப்பொன்றுமில்லை. ஆதலால் மகளிர் பழி பாவங்களுக்கு அஞ்சி கற்பு நெறிவழுவாமல் வாழ்வதற்கு நாணம் என்னும் நற்குணம் மகளிர்க்கு அவசியம் என்ற உண்மை புலப்படுகிறது.

**கற்பினைக் காக்கும் கவசம் நாணம்**

கற்பு மாட்சிமை இல்லாத ஒரு பெண்ணுடன் யார்தான் வாழ்வார்கள்? அத்தகைய பெண்ணுடன் வாழ்

திரு. எஸ். கிருஷ்ணன், பி.ஏ.,
தர்மபுரி.

வதை நீக்கவேண்டும் என்று கடைச் சங்க நூல்களில் மற்றொன்றான இனியவை நாற்பது,

“நிறை மாண்பில் பெண்டிரை
நீக்கல் இனிதே”
[பாடல்-10]

என்று கூறுகிறது. கற்பிழந்த மனைவியுடன் வாழ்தல் இம்மை, மறுமை இரண்டிற்கும் துன்பம் தருவதாகும். இம்மையில் தலையிறக்கத்தையும், அதாவது சமூகத்தில் தலைகுனியும் படியான இழி நிலையையும், மறுமையில் நரகத்தையும் தரும். ஆதலால்

# ★ வாழ்வு என்னும் போர்க்களம் ★

கண்களைத் திறந்து இயற்கையைச் சற்றே உற்றுப்பாருங்கள். பேருண்மை ஒன்றை அங்கே நீங்கள் காண்பீர்கள். அது எது?

இயற்கையில் எங்கும் ஓயாது போர் நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது என்பதுவே அது.

ஆம். சிற்றுயிராகட்டும், பேருயிராகட்டும், நீரிலாகட்டும், நிலத்திலாகட்டும் எங்கும் இடைவிடாது போராட்டம் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. சிற்றுயிர் பேருயிருக்கு இரையாகிறது. வலிமை குறைந்தது வலிமை மிக்கதற்கு அடிமையாகிறது.

பூச்சியைத் தவளை விழுங்குகிறது. அந்தத் தவளையைத் தனக்கு உணவாக்கப் பாம்பு ஒன்று பாய்ந்து அதைக் கவ்விப் பிடித்து விழுங்குகிறது. அந்தப் பாம்பைக் குறி பார்த்துக் கொத்தித் தனக்கு இறையாக்குகிறது வானத்தில் பறந்து கொண்டிருக்கும் ஒரு கருடன். அந்தக் கருடனைக் குறி வைத்து அம்பினால் அடித்து வீழ்த்துகிறான் வேடனொருவன். அதனை அபகரிக்க அவனை வீழ்த்த தருணம் பார்க்கிறான் மற்றொருவன். இவ்விதம் ஒன்றை ஒன்று வென்றோ அல்லது வீழ்த்தியோ வாழ்வதுவே இயற்கையில் காணக்கிடைக்கும் அன்றாட நிகழ்ச்சியாகும்.

பல்வேறுநாடுகளிடையே பல்வேறு சமுதாயத்தினருக்கிடையே பல்வேறு ஸ்தாபனங்களுக்கிடையேயும் இந்தப் போராட்டம் நீடிப்பதை நாம் காண்கிறோம். வாழ்வின் ஒவ்வொரு படித்தரத்திலும் போராட்டம். இதுவே இயற்கையின் அடிப்படை நியதி; இந்த நியதிக்கு அனைத்து உயிரும் உட்பட்டேயாகவேண்டும்.

இயற்கையே ஒரு போர்க்களம் எனில் நாமெல்லாம் யார்? நாமனைவரும் அதில் பங்கேற்கும் போர்வீரர்கள்.

அப்படியாயின் போர் செய்யாது நம்மால் உயிர் வாழ முடியாதா? முடியாது என்கின்றன நமது மறை நூல்கள்.

வாழ்வாகிய போர்க்களத்தில் போரிடும் போர் வீரர்களாகிய நாம் எப்படி போர் செய்து எவ்விதம் வெற்றி அடைய வேண்டும் என்ற வழியைத்தான் நமது வேத உபநிடதங்களெல்லாம் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன. குறிப்பாக பகவத் கீதை நாமனைவரும் வெற்றி வீரர்களாவதற்கான மார்க்கத்தைத்தெளிவாக எடுத்துக் கூறுகிறது.

'வாழ்வு ஒரு போர்க்களம். அதில் கோழைக்கு இடமில்லை. எனவே நீ கோழையாயிராதே' என்பதை நம் மனைவருக்கும் எடுத்துப் புகட்டுவதற்காகத் தான் போர்க்களத்தில் பகவத்கீதை பிறந்தது.

போர் செய்ய மறுத்தான் அர்ஜுனன். 'போர் செய்வது உன் கடமை' என்றார் பகவான். தன் கடமையை உணர்ந்து போர் செய்து அர்ஜுனன் வெற்றி அடைந்தான். இதுதானே கீதையின் சாரம்.

இத்துடன் நாம் நிறுத்தி விடுவோமாகில் கொலையெனும் பாபகாரியத்தைச் செய்ய மறுத்த அர்ஜுனனைப் பகவான் கொலை செய்யத் தூண்டினார் என்ற தவறான கருத்து சிலருடைய மனத்தினில் எழுவதற்கு வகை செய்த குற்றத்திற்கு நாம் உட்பட்டவர்களாய் விடுவோம். எனவே அர்ஜுனனுக்கு அன்று பகவான் போர்க்களத்தில் புகட்டிய உயர்ந்த தத்துவம் இன்று வாழ்வாகிய போர்க்களத்தில் இடையறாது போர் புரியும் நமக்கு எப்படிப் பொருந்தும் என்பது பற்றி நாம் ஆழ்ந்து சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அர்ஜுனன் ஒரு க்ஷத்திரியன் எந்த நிலையிலும் மறத்தை முடிபடித்து, அறத்தை நிலைநாட்டப் போர் செய்வதே அவனது தலையாய கடமையாகும். மறத்தை ஆதரித்துப் போர்க்களத்தில் அவனது உற்றார், உறவினர், ஆச்சாரியர்களே வந்து நின்றாலும் சரி-அதற்கு எதிராக அணி வகுத்துப் போரிட்டு அறத்தை நிலை நாட்டுவதுதான் ஒரு உத்தம க்ஷத்திரியனது கடமை. அதிலிருந்து நழுவப் பார்த்தான் காண்டீபன். ஏன்? நான் யாருடனோ வேற்றருடன் போர் செய்யப் போகிறோம் என்று எண்ணியிருந்தான், போர்க்களத்தில் தன்னை உருவாக்கி வளர்த்தெடுத்த மதிப்பிற்குரிய குருமார்களையும், ஏனைய பந்துக்களையும் நேருக்கு நேர் கண்டதும், உடனே தனது க்ஷத்திரிய கடமையை மறந்து பாசத்திற்குட்பட்டு, மோகத்தின் வயப்பட்டு திடீரென்று தாற்காலிகமாக 'தத்துவ ஞானியாக' மாறி 'எதற்காக இந்த கோர யுத்தம்? இதைவிட நான் பிச்சையெடுத்து உண்பதுவே சாலச் சிறந்தது. ஏன்? என்னையே நான் மாய்த்துக் கொள்வேன்! யார், யார் சொத்தை அபகரிப்பது? அவர்களே ராஜ்யத்தை ஆளட்டும்'' என்றெல்லாம் பேசி-இல்லை பிதற்றி-ஜடை முடி தரித்து துறவியாகிக்

சீலன்
மதுரை

காட்டிற்கு ஓடும் நிலையில் இருந்தான். குறிப்பாக அவனது வாழ்க்கையில் அத்தகைய ஒரு பெரும் சிக்கல் எழுந்ததும் அதைக்கண்டு அவன் கதிகலங்கி மதிமயங்கி நெறி பிறண்டு தப்பி ஓடப் பார்த்தான். அப்பொழுது கண்ணன் அவனுக்குக்கீதையைப் புகட்டினர். "அர்ஜுனு! யார் யாரைக் கொல்வது? உடல் என்றுவது ஒருநாள் அழியும் தன்மையது. ஆன்மாவோ அழிவற்றது. க்ஷத்திரியனுகிய உனது கடமை அறப்போர் செய்வதேயாகும். 'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்தை விடுத்து "இறைவா நீ என்னைச் செய்விக்கின்ருய்' என்ற எண்ணத்தில் ஊறி நின்று செயல் புரி, அப்பொழுது நீ செயல் செய்தும், செயலின் விளைவுகளுக்குக் கட்டுப்படமாட்டாய். இடையருது செயல் செய்து கொண்டிருப்பதற்கிடையில் அனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்த,செயலற்ற,செயல் கடந்த பெருநிலையை அடைவாயாக' என்பதுவே கண்ணன் பார்த்தனுக்குப் புகட்டிய கீதையின் சாரமாகும்.

அர்ஜுனனின் நிலையில் நாம் நம்மை வைத்துக் கொள்ள வேண்டும். கண்ணன் காட்டிய வழி அர்ஜுனனுக்கு மட்டுமல்ல, நம் அனைவருக்கும் உரியதாகும். பிறப்பால், சூழ்நிலையால் நமக்கு எத்தகைய கடமைகள் வந்து வாய்க்கின்றனவோ, அவற்றைச் செவ்வனே பற்றற்று திறம் படச் செய்வது தான் வாழ்வில் வெற்றி அடைவதற்கான வழியாகும்.

கீதை ஒரு பொது நூல். அது காட்டும் வழி உலக மக்கள் அனைவருக்கும் எந்தவித வேறுபாடுமின்றி பொதுவானதாகும். தனி மனிதனின் வாழ்வில், சமுதாய வாழ்வில், தேசிய வாழ்வில், உலக வாழ்வில் ஒளி மயமான எதிர்காலம் வேண்டின் அதற்கு கீதையின் வழியைத் தவிரப் பிறிதொன்று இல்லை என்று நாம் உறுதியாகக் கூறலாம்.

பெரும்பாலும் நமது நிலை எப்படியிருக்கிறது? வாழ்வில் சிக்கல்கள், பிரச்சினைகள் எதுவும் தோன்ருதிருக்கும் நிலையில் 'இவ்வையக வாழ்வே எனக்குப் போதும், இதற்கு நிகர் வேறு ஏது இருக்க முடியும்? இறைவா! இவ்வுலக இன்பங்களை அனுபவிக்க எனக்கு சாகாவரத்தைக் கொடு. எனக்கு நிகர் இவ்வையகத்தில் எவருண்டு'! என்று இறுமாப்புடன் ஒருவன் பேசுகிருன்.

வாழ்வு எப்போதும் ஒரே நிலையில் இருப்பதில்லையல்லவா? ஏன்? அப்படி இருக்க முடியாது என்பதுதான் இயற்கை நியதி. "நேற்றைய அரசன் இன்றைக்கு ஆண்டி" "நேற்றைய குபேரன் இன்றைய பிச்சைக்காரன்" நேற்றைய அழகி இன்றைய குரூபி" நேற்றுவரை உலகத்தை ஆட்டிப் படைத்தவனை இன்று உலகம் முழுவதும் ஆட்டி அசைத்துப் பட்டாத பாடு படுத்துகிறது. ஏன்? காலம் மாறுகிறது, நிலைமை மாறுகிறது. எதிர்பாராத சிக்கல் வாழ்வில் ஏற்பட்டு விடும் நிலையில், முன்பு "இறைவா! எனக்குச் சாகாவரத்தைக் கொடு", என்று வேண்டிய அந்த நபர், இப்பொழுது "இறைவா! போதும் இந்தப் பிறவி. வாழ்வில் பட்டதெல்லாம் போதும். பட முடியாது இனித்துயரம். உடனடியாக என் உயிரை நீ எடுத்துக்கொள். இன்றேல்... நான்... தற்கொலை செய்து கொள்வேன்... அதற்கு நீயே பொறுப்பு" என்று கோழையிலும் கோழையாகி ஓலமிடுகிருன்.

அன்று வீராதி வீரனுன அர்ஜுனன் போர்க்களத்தில் அப்படித்தான் ஓலமிட்டான். இன்று நாம் நமது வாழ்வில் அப்படி ஓடுமிடுகிறோம்.

அப்பொழுது நம்மைப் பார்த்துப் பகவான் என்ன செய்கிருர்? புன் முறுவல் செய்கிருர். நம்மைப் பார்த்து கருணை கூர்ந்த கண்களுடன் "குழந்தாய்! நீ இன்பத்தில் இறுமாப்புக் கொள்ளாதே; துன்பத்தில் துவண்டும் போய் விடாதே. இருவேறு நிலைகளிலும் சமமான மன நிலையைக் கைக்கொள். எதுவரினும் வருக என்று உறுதியுடன் அதை எதிர்த்து நில். வந்த துன்பம் உன்னைக் கண்டு பயந்து தூர விலகிவிடும். துணிவே துணை. உறுதியான உள்ளமே உயர் நிலையை அடைவதற்கான ஊன்று கோல். எழுந்திரு, பற்றற்றுக் கடமையைச் செய். வெற்றி உனதே." என்று அருள்மொழி பகர்கிருர்.

கண்ணன் காட்டிய வழியில் சென்று வாழ்வில் வெற்றியும், அமைதியும், ஆனந்தமும் அடைவோமாக!



# சந்தாதாரர்களுக்கு....

*31-10-81 ம் தேதியுடன் சந்தாக்காலம் முடிவடையும் சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. தொகை அனுப்ப வேண்டிய முகவரி :* The Welfare Officer, Publication Section T. T. D., TIRUPATI. T

*9, 89, 94, 138, 164, 170, 181, 194, 197, 200, 207, 246, 262, 285, 427, 496, 508, 514, 519, 587, 718, 1699, 1880, 1983, 1986, 1987, 1989, 1991, 1993, 2000, 2108, 2112, 2115, 2116, 2119, 2128, 2129, 2130, 2131, 2135, 2139, 2142, 2145, 2149, 2150, 2178, 2179, 2268, 2289, 2359, 2360, 2426, 3080, 3355, 3568, 3569.*

# குறுக்கெழுத்துப் புதிர்

திரு. எஸ். ஜி. சேஷகிரி-கோவை.




| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | | 3 | | X | 4 | | |
| 5 | | X | | X | 6 | | | |
| 7 | | | X | 8 | | | | |
| | | X | 9 | | | | X | X |
| | X | 10 | | X | 11 | | | X |
| 12 | | | | X | | X | X | 13 |
| | X | | X | 14 | X | 15 | | |
| X | 16 | X | 17 | | | | | X |
| 18 | | | | X | 19 | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. இவரை முழு முதற் கடவுளாகக் கொண்ட மதத்திற்கு காணபத்ய மதம் என்று பெயர். கி. பி. 10ம் நூற்றாண்டில் இம்மதம் வடநாட்டில் சிறப்புற்றது.
4. விநாயகருக்கு கரங்கள்———. (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் தொழில்கள் புரியவே இக்கரங்கள்)
5. முருகன் கை———ஞானத்தின் சின்னமாகும்.
6. மீராபாய் கண்ணனைத் தன்———என்ற பாவனையில் காதலாகி கசிந்துருகி கண்ணீர் மல்கி அவனுள் கலந்து ஆடிப்பாடி வாழ்ந்தாள். (வள்ளலாரும் இப்படியே சிவபெருமானிடம் ஈடுபட்டார்.)
7. ———ஆட்டம் முருகன் திருப்பதிகளிலே சிறப்பு.
8. முருகன் பிரணவத்தின் பொருளை சிவபெருமானுக்கு உபதேசித்து———சாமி எனப் பெயர் பெற்றான்.
10. பத்ராசல தலம் என்றாலே———தாசர் நினைவு எழும்.
11. சகல புவங்களையும் ஈன்ற அன்னை புவனேச்வரியை மறைகள்———என்று பேசுகின்றன.
12. பாண்டவரில் மூத்தவன்———. ஆனால் அறம் தவறி அவனும் சூது ஆடினான்.
15. முதலை வாய் சென்ற ———யை சுந்தரர் மீட்டுத் தந்தது அவினாசிப் பதியிலே.
17. ———கூனையும், சுரத்தைம் போக்கி திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அற்புதம் காட்டினார்.
18. நடந்து கொண்டேனும், கிடந்து கொண்டேனும் திருநீறு ——— கூடாது,
19. வாழ்வாவது ——— போன்றது என்கிறார் அருணகிரி நாதர்.

### மேலிருந்து கீழ்

1. ராமகிருஷ்ண பரமஹம்சருக்கு உற்ற சீடர். நாகரிக ஆங்கில கல்வி கற்றவர் என்பது இவருக்கு சிறப்பு.
2. சைவ சமயக் குரவர் ———.
3. சமணர்கள் ———லிலே சேர்த்துக்கட்டி கடலில் இடவும் அதுவே தோணியாகி கரை ஏறினது திருநாவுக்கரசு நாயனாரிடம் விளங்கிய அற்புதம்.
4. நாளுக்கு நாள் ——— பூசை பெருகி வருகிறது.
6. ——— பற்றி கண்ணோட்டம் என்ற அதிகாரத்தில் (தாட்சண்யம் என்ற தற்கால வழக்குப் பொருளில்) பேசுகிறார் திருவள்ளுவர்.
8. தெய்வ சந்நதியில்———தாழ்த்தி வணங்கல் முறை.
9. பாண்டவரில் பலசாலி ——— சிறந்த சிவ பக்தன்.
10. காளிதாசன் இயற்றிய ரகுவம்சம் எனும் நூல் ——— குலநலம் பற்றி விரிவாகக் கூறுகிறது.
13. பக்தி ———யில் படுவான் ஈசன் என்கிறார் மணி வாசகர்.
14. ஆங்கோர் கல் ——— பிளப்ப சீரிய சிங்கம் வெளிப்பட்டது பிரகலாதனுக்காக.
15. அசுரத்தச்சன் (சிற்பி).
16. ———வை கறி சமைத்திடச் செய்து விருந்துண்ண. எழுந்தருளி சிறுத்தொண்ட நாயனாரை ஆட்கொண்டார் சிவபெருமான்.
17. ——— நினைந்து ஊட்டும் தாயினும் தயவானவன் ஈசன் என்கிறார் வாதவூரார்.

(விடைகளுக்கு 24ம் பக்கம் பார்க்க)

# பொய்கைமுனிவர்

திரு. ஆர். சீனிவாசதேசிகன்,
விழுப்புரம்.

தமிழகத்தில் தொண்டை நாட்டுப் பகுதியில் செங்கற்பட்டு மாவட்டத்தில் அமைந்துள்ளது காஞ்சி மாநகர். தற்சமயம் இந்நகர் செங்கை மாவட்டத்தின் தலைநகரமாய் விளங்குகிறது. 'தொண்டைநாடு சான்றோருடைத்து' என்னும் மொழிக்கேற்ப இவ்வூரில் அநேக மஹான்கள் தோன்றி மக்களுக்கு நன்னெறிகள் போதித்துள்ளனர். பல்லவர்கள் இந்நகரைத் தங்கள் தலைநகராகக் கொண்டு ஆட்சி நடத்தி வந்தனர். பழங்காலந் தொட்டே இவ்வூர் சிறப்பு மிக்கதாக இருந்து வருகிறது. ஸம்ஸ்கிருத மொழியில் இதன் சிறப்பை 'நகரேஷு காஞ்சி' என்னும் சொற்றொடரால் அறிகிறோம். மேலும் இந்நகரை ஸ்ரீ வேதாந்த தேசிகர் என்னும் வைணவ ஆசாரியர் "காசி முதலாகிய நந்நகரி யெல்லாம் கார்மேனி அருளாளர் கச்சிக் கொவ்வா, முத்தரும் நகரேழில் முக்கியமாம் கச்சி" என்றும் போற்றியுள்ளார். இவ்வூரின் வேறு பெயர்கள் கச்சி, கச்சிப்பேடு முதலியன. இப்பதியில் வரதராஜப்பெருமாள் கோவில், காமாட்சி அம்மன் கோவில், ஏகாம்பர நாரதர் கோவில் முதலான கோவில்கள் உள்ளன. பிரம்மதேவன் இந்தத் தலத்தில் வேள்வி நடத்தியதாக்வும், வேள்வியினின்று அத்திகிரித் திருமால் தோன்றியதாகவும் தலவரலாறு அறிவிக்கிறது. வடமொழியில் இத்தலத்தின் பெயர் ஸத்ய விரத க்ஷேத்ரம் என்பதாகும்.

இவ்வளவு ஏற்றமும் சிறப்பும் மகிமையும் கொண்ட இக்கச்சி என்னும் திவ்ய தலத்தில் ஒரு சித்தார்த்தி ஆண்டில் ஐப்பசி மாதத்திருவோணத்து நாளில் பொய்கை முனிவர் என்னும் பொய்கையாழ்வார் பொற்றாமரைப் பொய்கையில் (குளத்தில்) ஒரு தாமரை மலரில் தோன்றினார் என்று வரலாற்றாலறிகிறோம். இவ்வாழ்வாரை திருமாலின் திருச் சக்கரப்படையின் அம்சம் என்று கூறுகின்றனர். பொய்கையில் தோன்றியதால் இம்முனிவரின் பெயர் "பொய்கையார்" என வழங்குகிறது. ஆழ்வார்கள் பன்னிருவர்களில், முதலாழ்வார்கள் மூவரில் இம்மஹான் முதலாழ்வாராவார்.

பிள்ளைப்பிராயம் முதற்கொண்டு இவ்வாழ்வார் திருமாமகள் கேள்வன் திருமாலிடம் பக்தி பூண்டு ஒழுகி வந்தார். திருமாலின் திருக்கோவில் உள்ள தலங்களுக்குச் சென்று வழிபட்டு, காதலால் கசிந்து கண்ணீர் மல்க நின்று வாழ்நாட்களைக் கழித்து வந்தார். ஊர் ஊராகச் சென்று கொண்டு ஒருநாள் திருக்கோவலூர் என்னும் ஊருக்குச் சென்றார். இவ்வூர் தென்னாற்காடு மாவட்டத்தில் பெண்ணை யாற்றங்கரையில் அமைந்துள்ளது. ஆழ்வார் ஊரினுள் சென்றபோது ஆதவன் மறைந்து இரவு நேரமாகிவிட்டது. ஆழ்வார் ஓர் இல்லத்தின் (மிருகண்டு முனிவரின் ஆச்ரமத்தில்) இடைகழியில் (ரேழி, வீட்டின் வாயிற் புறநடை) இடங்கேட்டு அங்கே தங்கியிருந்தார். அவ்வமயம் முதலாழ்வார்கள் மூவரில் மற்றும் இரு முனிவர்களும் அங்கே வந்து சேர்ந்தனர். மூவருக்கும் நிற்பதற்கே இடம் போதுமானதாக இருந்தது. ஒருவருக்கொருவர் நெருக்கிக் கொண்டு நின்று கொண்டிருந்தனர். பலத்த காற்று, இடி, மின்னலுடன் மழை பெய்து கொண்டிருந்தது. முனிவர் மூவரும் உள்ளத்துறைகின்ற உத்தமனை மனத்தால் சிந்தித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது திருமாது வாழ்மார்பன் அன்பர் மூவருக்கும் காட்சியளித்தான். பொய்கையாழ்வார் "வையந்தகளியா" என்று தொடங்கும் முதல் திருவந்தாதியை அருளினார்.

அந்தப் பிரபந்தத்தின் முதல் பாசுரம்:

வையந்தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக-செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன்
சொன்மாலை
இடராழி நீங்குக வேஎன்று.

*

## புண்ணிய பாதையிலே

ராஜதரங்கிணி-மேட்டூர்.

நலம்தரும் இறைவனைப் பூஜிக்கின்றேன்
நான்மறை தனைநிதம் நேசிக்கின்றேன்
பலபல நூல்களை வாசிக்கின்றேன்
பயன்தரும் வழிகளை யோசிக்கின்றேன்!

அன்னையை தந்தையை வணங்கிடுவேன்
அநுதினம் அவர்சொல்லில் இணங்கிடுவேன்
என்னையே பிறருக்காய்ச் செய்திடுவேன்
எழில்மிகு பெருமைகள் எய்திடுவேன்!

தாயக நினைவினில் திளைத்திடுவேன்
தேசத்திற் காகநான் உழைத்திடுவேன்
நாயகமானதோர் வாழ்வமைப்பேன்
நன்னெறி முறையினில் நலம்பயப்பேன்!

உண்மையே உலகினில் உரைத்திடுவேன்
ஒழுக்கத்தை என்னுள் நிறைத்திடுவேன்
நன்மையிலே மணம் ஏற்றிடுவேன்
நானில மீதினில் போற்றிடுவேன்!

சேவையை என்றும் விரும்பிடுவேன்
சிங்காரச் செயல்கள் அரும்பிடுவேன்!
பூவிதழ்போல் நான் புன்னகைப்பேன்
புண்ணிய பாதையில் புகழ்சமைப்பேன்.

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

**திருமாலுக்குரிய ஆயுதங்கள் என்ன?**

5 எனவும் 16 எனவும் கூறுவதுண்டு.

1. திருவாழி—சுதர்சனன் என்ற சக்ராயுதம்.
2. பாஞ்சஜன்யம் என்ற சங்கு.
3. கௌமோதகீ என்ற கதை
4. நந்தகம் என்ற வாள்.
5. சார்ங்கம் என்ற வில். ஆக பஞ்சாயுதங்கள்.

இவை ஒவ்வொன்றும் ஜீவா திஷ்டானத்துடன் அனுக்ரஹ சக்தி யுள்ளவை.

**ஷோடச உபசாரங்கள் யாவை?**

1. அர்க்கியம் ...கை அலம்ப நீர் அளித்தல்
2. பாத்தியம் ...திருவடி அலம்ப நீர் அளித்தல்
3. ஆசமநீயம் ..மும்முறை மந்திர நீர் அருந்த நீர் அளித்தல்
4. ஆசனம் ..அமர ஆசனமளித்தல்
5. அபிஷேகம் ..நீராட்டம் அதாவது திருமஞ் சனம் கண்டருளப் பண்ணுதல்
6. வஸ்திரம் ..உடுத்தத் தூய திருப்பரி வட்டம் சமர்ப்பித்தல்
7. கந்தம் ..நறுமணப் பொருள் இடுதல்
8. புஷ்பம் ...மலர் சூட்டுதல்
9. தூபம் ...நறுமணப் புகைவாடை சமர்ப்பித்தல்
10. தீபம் ..திருவிளக்காட்டுதல்
11. நைவேத்தியம்.தளிகை கண்டருளப் பண்ணுதல்
12. கர்ப்பூரம் ..கர்ப்பூர ஆரத்தி எடுத்தல்
13. சாமரம் ...கவரி வீசுதல்
14. ஆலவட்டம் ...விசிறி வீசுதல்
15. சத்ரம் ...மரியாதைக் குடை சமர்ப்பித்தல்
16. தர்ப்பணம் ..தட்டொளி (கண்ணாடி) காட்டுதல்

இப்பதினாறு வகைகளை "ஆவாஹனம்" தொடங்கி "உத்வாஸனம்" ஈறாகக் கணக்கிடுவதுமுண்டு. இதில் பல பிரிவுகள் உண்டு.

**நாராயண மந்திரத்தை ஓதுவதால் ஏற்படும் நன்மைகள் என்ன?**

குலம் தரும், செல்வம் தந்திடும், அடியார்
படுதுய ராயின எல்லாம்
நிலம் தரும் செய்யும், நீள் விசும்பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்.
வலம் தரும், மற்றும் தந்திடும், பெற்ற
தாயினும் ஆயின செய்யும்,
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

ஒரு ஸ்ரீ வைஷ்ணவன் அறியவேண்டிய தத்துவங்கள் அனைத்தும் உட்கொண்ட மஹாமந்திரம். பெண்கள் இம்மந்திரத்தைச் சொல்வதானால் 'ஓம்' என்பதற்குப் பதில் 'அம்' என்று கூறவேண்டும்.

**ஸ்ரீ வைணவர்களுக்கு இருக்கவேண்டிய பண்புகள் யாவை?**

பத்து திருக்குணங்கள் என்பர். அவையாவன :

1. புறப்பற்றை விடுதல் பகவத் விபூதியான இவ்வுலகம் நித்யம் என இருப்பது.
2. திருமாலையே தஞ்சமாகப் பற்றி, அவன் அருளும், பேறும் கிடைப்பது தப்பாது என்று துணிதல்,
3. கண்ணனது "சரமசுலோகம்" என்ற பகவத் கீதை திருவாக்கில் "என்னையே உபாயமாகப் பற்று" எனக் கட்டளை இட்டிருப்பதால், அவரையே பற்றி தனித்திருத்தல். கீதை 18-வது அத்தியாயம் 66-வது செய்யுள்.
4. அவரை அடைய அளவற்ற ஆர்வத்துட னிருத்தல்.
5. உலகில் தங்கி இருக்கும் நாட்களில், ஆழ்வார் மங்களாசாஸனம் செய்த திருப்பதி களில் தங்கி, அவர் திருக்குணங்களையும் அவர் வடிவழகையும், அனுபவித்துக் கொண்டு அவருக்குத் திருப்பணிகள் செய்து மகிழ்தல்.
6. ஸ்ரீ வைணவ அடியார்களிடத்தில் முக்கரணங்களாலும் பற்றுடன் இருத்தல்.
7. திருமந்திரம் என்ற எட்டெழுத்து மந்திரத்திலும், துவயம் என்ற மந்திரத்திலும், ஊன்றி இருத்தல்
8. அளவற்ற ஆசாரிய பக்தியுடனிருத்தல். ஆசாரிய ஸம்மந்தம்கொண்டே திவ்ய தம்பதிகளிடம் சரண்புகுதல்.
9. ஆசாரியன்—எம்பெருமான், இருவர்களிடமும் நன்றி கொண்டிருத்தல்.
10. இறுமாப்பறுத்து மனச்சாந்தியுடன் இறுத்தல்.

**ஸ்ரீவைணவர்களை "ஐயங்கார்" என ஏன் அழைப்பது?**

"திருவிலச்சினை" என்ற ஐந்து (அங்கங்களை) சம்ஸ்காரங்களை ஆசாரியனிடமிருந்து பெறுவதால், ஆகவே ஐந்து அங்கங்களைப் பெற்றவர் ஐங்கார் எனப் பொருளாயிற்று. இதனை ஸமாச்ரயணம் என

வும் அழைப்பார்கள். இந்தத் தீக்ஷை ஆசாரியனிடமிருந்தே பெறவேண்டியது. அவையாவன:

1. திருத்தோள்களில் சக்கரம், சங்கு, முத்திரை (தீயிலிட்டு) பெறுதல்.
2. பன்னிரு திருமண்காப்புகளை மந்திரத்துடன் உடலில் அணிந்து கொள்ளுதல்.
3. புதியதாக "தாஸ்ய நாமம்" என்ற, திருப் பெயர் இட்டுக் கொள்ளுதல்.
4. மந்திரோபதேசம் பெறுதல்.
5. திருவாராதன (பூசை) பண்ணத் தொடங்குதல் என்பன.

இவைகளை தாபம், புண்ட்ரம்-நாமம்-மந்திரம் யாகம் எனக் கூறுவர். இப்படிக் கூறுவது ஒரு பக்ஷம்.

**ஸ்ரீவைணவர்களை இரு முப்பொழுதேத்தும் தொண்டர்கள் என்பது ஏன்?**

ஒருநாளை 5 கூறுகளாக்கி (அபிகமனம், உபாதானம், இஜ்யை, காலக்ஷேபம், யோகம் என்றபடி) அந்த அந்தக் காலத்தில் முறைப்படி அனுட்டானம் செய்து கொண்டிருப்பதால், ஸ்ரீவைணவர்களை இரு முப்பொழுது ஏத்தும் தொண்டர்கள் என அழைக்கிறார்கள்.



(21-ம் பக்க விடை)

**குறுக்கெழுத்துப் புதிர் விடைகள்**

இடமிருந்து வலம்

1. விநாயகர்
4. ஐந்து
5. வேல்
6. நாயகன்
7. காவடி
8. தகப்பன்
10. ராம
11. கன்னி
12. தருமன்
15. மதலை
17. பாண்டியன்
18. பூசுதல்
19. மின்னல்.

மேலிருந்து கீழ்.

1. விவேகானந்தர்
2. நால்வர்
3. கல்
4. ஐயப்பன்
6. நாகரிகம்
8. தலை
9. பீமன்
10. ராமன்
13. வலை
14. தூண்
15. மயன்
16. சிசு
17. பால்.

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

யணிந்து செல்லும் ஒரு பெண்ணை, நாணமுடையவள் என்று எவ்வாறு கூற முடியும்? அவளை நாணமற்றவள் என்றுதான் உலகம் பழிக்கும். அத்தகைய பெண், தான் மெய்யடக்கம் இல்லாத நாணமற்றவள் என்பதை, அவள் அணிந்துள்ள அரை, குறை ஆடை வாயிலாக நிரூபித்து விடுகிறாள். இத்தகைய மன, மொழி, மெய் அடக்கம் மானிடருக்கு எவ்வாறு உண்டாகிறது. ஸ்ரீ கிருஷ்ண பகவான் அருளியுள்ள ஸ்ரீமத் பகவத்கீதையின் 10-வது விபூதியோக அத்தியாயத்தில்,

"புத்தி, ஞானம், பொறுமை ஆகியவற்றுடன் அடக்கம், எனும் தன்மையும் பிராணிகட்கு என்னிடத்திருந்தே உண்டாகின்றன" என்று அருளுகிறார். ஆதலால் பகவானை வழிபட்டு அவருடைய அருளைப் பெற்று மன அடக்கம், மொழி அடக்கம், மெய் அடக்கம் பெற்று, அதன் வழி நாணம் எனும் சிறந்த அணிகலன் பெற்று மகளிர் வாழ முயல வேண்டும்.

**நாணமும் தெய்வத்தன்மையும்**

பகவானின் ஸ்ரீமத் பகவத் கீதையின் 16-வது அத்தியாயமான தைவாசுர ஸம்பத் விபாக யோக அத்தியாயத்தில் நாணத்தின் சிறப்பைப் பற்றித் திருவாய் மொழிந்தருளியிருக்கிறார்.

பயமின்மை, மனத் தூய்மை, அடக்கம் ஆகியவற்றுடன் நாணம் ஆகிய நற்குணங்கள் தெய்வத் தன்மையைக் கொண்டு பிறந்தவர்களிடம் திகழ்கின்றன என்றும், வீண் ஆடம்பரம், செருக்கு, அறிவின்மையாகிய தீக்குணங்கள் அசுரத் தன்மையைக் கொண்டு பிறந்தவர்களிடம் திகழ்கின்றன என்றும், பகவான் உபதேசம் செய்கிறார். ஆதலால் மகளிர் நாணம் என்னும் நற்குணத்தைப் பேணி, வீண் ஆடம்பரம், டம்பம் ஆகிய தீக்குணங்களை ஒழித்து, தாங்கள், தெய்வத் தன்மை வாய்ந்தவர்கள் என்பதை உலகிற்கு உணர்த்த வேண்டும்.

**நாணத்தின் உயர்வு**

உயிரானது உடம்புடன் கூடியிருந்தால்தான் உலகில் பயனுடையதாக விளங்கும். அவ்வாறின்றி உடம்போடு கூடியில்லாமற் போனால் உயிரினால் உலகிற் பயனேதும் இல்லை. அவ்வாறே உயிரற்ற உடலையும் உலகில் யாரும் மதிப்பது இல்லை. இதைப் போலவே நிறை என்னும் கற்பு நாணோடு கூடியில்லாமற் போனால் அது பயனற்றதாக அழிந்து விடும். நாணுடன் கூடிய கற்பே நிலைத்து நிற்கும் சீரிய கற்பாகும். அழகிய புடவை, விலை உயர்ந்த ஆபரணங்கள், மனங்கவர் மலர் ஆகிய புற அழகை மிகைப் படுத்தும் அணிகலன்களைப் பூண்டு ஒரு பெண் பீடு நடை போட்டாலும், அப்பெண்ணிடத்தில் நாணம் எனும் உயர் அணிகலன் இல்லாமற் போனால், அவளுடைய பீடு நடையானது காண்பவர்க்கு பிணியாகத்தானிருக்கும்.

**நாணமுடைமையும் நல்வாழ்வும்**

மேலே விவரித்தபடி நாணத்தின் சிறப்பையும், நாணத்தின் உயர்வையும் பலவாறு கூறலாம். மகளிர்க்கு பெருமை தருவது நாணம். நல்லவர் போற்றுவது நாணம் எனும் நற்குணம். எல்லாவற்றிற்கும் மேலாக மகளிர்க்கு கற்பினுக்கு கவசமாக விளங்குவது நாணம். இத்தகைய நாணத்தை மகளிர் தம்முடைய அணிகலனாகப் பெற்று, நல்வாழ்வு வாழ வேண்டும் என்பதே இக்கட்டுரையின் குறிக்கோளாகும்.



தொடர் கட்டுரை

# இந்திய மருத்துவம்

டாக்டர். எஸ். ஜெயராமன்,
R.M.P., M.I.H., L.I.M.,
திருப்பதி.

நோய்: மாலைக்காசத்தின் குணம்: கண்ணுறுத்தி வலி தெரியும். கருவிழி சற்றே கலங்கினாற் போல் தெரியும். தீபத்தைப் பார்க்கின் வேறு வித மாய்க் காட்டும்.

மருந்து: இந்துப்பு, மஞ்சள் சாரடை (மஞ்சள் சாட்டரணை) வேர், இவைகளையோர் நிறையாய்ப் பழச் சாற்றிலரைத்து, கபிறு செய்து முலைப்பாலில் உரைத்து கண்ணிலிட்டு வர நோய் தீரும்.

நோய்: சுருங்கு கண்ணின் குணம்: குவளை புண்ணாகி நாளுக்கு நாள் கண் சுருங்கிக் கொண்டே வரும்.

மருந்து: சங்கு, காந்தம், கடல் நுரை, நன்றாய் சுட்ட செங்கல்லை பொடித்து சலித்து எடுத்த சன்ன மான தூள், இந்துப்பு, மனோசிலை, சயிலம், பீதரோகணி, பச்சைக் கற் பூரம் இவைகளை சம எடையாய் எடுத்து நந்தியாவட்டப் பூச்சாற்றில ரைத்து, பின் இதனுடன், சம எடை பசுவின் வெண்ணெயைக் கூட்டி யரைத்து காலை மாலை கண்ணிற்றீட்டி வர, சுருங்குக் கண் அதன் சம்பந்தப் பட்ட மற்ற நோய்களும் தீரும்.

நோய்: ஒட்டுக்கண்ணின் குணம்; கண்ணில் எப்பொழுதும் பீளை கட்டி நீர் சொறியும்.

மருந்து: துத்தம், புளியம் பொருக் குச் சுட்ட சாம்பல், கடுக்காய் சுட்ட கரி, இவைகளையோர் நிறையாய் ஆவின் வெண்ணெயில் அரைத்து கண்களில் போட்டு வர திரும்.

நோய்: கண் மந்தம், நீர்ப் பாய்ச் சல், மலங்கள் பித்தத்திற்கு:

மருந்து: சந்தனம், குமரி, அதி மதுரம் வகைக்கு பலம் ஒன்று இவை களை கால்படிஆவின்பாலில் அரைத்து கலக்கி, காய்ச்சி தலையில் தளமிட்டு மாலையில் ஸ்நானம் செய்து வர நோய் தீரும்.

நோய்: இருண்ட கண்ணுக்கு:

மருந்து: நெல்லிமுள்ளி, புங்க விதை, வெள்ளுள்ளி, சிறுகீரை இவைகளைச் சமமாய் மெழுகு போல ரைத்து உருண்டை செய்து வெய்ய லிலும், நிழலிலும் மாற்றி மாற்றி காயவைத்து முலைப்பாலில் உரைத்து கண்ணிலிட்டு வர தீரும்.

நோய்: வெள்ளை விழி சிவந்து ரத் தம் கட்டியதுபோல் காணும் ரத்தப் பாய்ச்சலுக்கு;

மருந்து: தேள் கொடுக்கின் இலை யை கசக்கி, நோயுற்ற கண்ணில் மூன்று முதல் நான்கு துளிகள் வரை காலை மாலை இருவேளையும் பிழிந்து வர தீரும்.

நோய்: கண் பூவுக்கு:

மருந்து: தேள் கொடுக்கிலையை யும் நந்தியவட்டப் பூவையும் ஓர் நிறையாய் கசக்கி கண்ணிற்பிழிந்து வர தீரும். அல்லது முசுமுசுக்கை யிலையையும் நற்சீரகத்தை ஓர் நிறை யாய் சேர்த்து முலைப்பால் விட்டு சிதைத்து பிழிந்து வர தீரும். அல் லது பூநாகம், வெள்ளைக் காக்கணம் வேர், வெள்ளைச்சாரணை வேர், துருசு, பவளம், முத்து, செம்புப் பொடி, பொன் இவைகளையோர் நிறையாய் ஊமத்தஞ்சாற்றில் அரைத்து கபிறு செய்து உலர்த்தி, முலைப்பாலில் உரைத்து கண்ணிற்போட மேற்கூறிய நோய் தீரும்.

சீனிக்காரத்தை கொஞ்சம் பீங் கான் கிண்ணத்தில் வைத்து அது நன்றாக முழுகும்படி பழச்சாறுவிட் டுக் காய வைத்து, அப்படி காய்ந்த சீனிக்காரம், பச்சைக் கற்பூரம், இவையிரண்டையும் ஓர் நிறையாய் முலைப்பாலில் உரைத்து கண்ணி லிட்டு வந்தாலும் கண் பூ கரைந்து குணம் காணும்.

நோய்: பூ, வெள்ளெழுத்திற்கு:

மருந்து: பீதரோகணி, நற்பவளம் சாரடைவேர் இவைகளை சமமாய் தண்ணீரில் அரைத்து கபிறு செய்து, காயவைத்து முலைப்பாலில் உரைத் துப் போட கண் பார்வை குறைவி னால் உண்டாகும் வெள்ளெழுத்து குறையும்.

நோய்: பூ, படலத்திற்கு:

மருந்து: முத்து, பவளம், துருசு, பளிங்குக்கல், பூங்காவி, காரீய யம், இரதம் (ரசம்) சீனிக்காரம் வெந்தியம், தலையோடு வகைக்கு 5 கிராம் பழச்சாற்றிலரைத்து கபிறு செய்து முலைப்பாலில் உரைத்துப் போட்டு வர நோய் தீரும்.

நோய்: கண் கூச்சத்திற்கு:

மருந்து: வேப்பங்கொழுந்து, கற் றாழைமணி, கடுக்காய், தேற்றாவிதை இவைகளையோர் நிறையாய் முலைப் பாலில் (முலைப்பால் கிடைக்காவிடில் கலப்படமில்லாத ஆவின் பாலில்) அரைத்து கொதிக்க வைத்து, கண் களுக்கு புறவளையமிட்டு, பொன்னாங் கண்ணி வேர், அதிமதுரம் இவைகளை முலைப்பால் விட்டு சிதைத்து துணி யில் முடிந்து, மேலும் கொஞ்சம் முலைப்பாலில் சிறிது நேரம் ஊற வைத்து, கண்களில் தினமும் மூன்று அல்லது நான்கு முறை பிழிந்து, மேற் படி முடியை வெதுவெதுப்பான நெய்யில் நனைத்து கண்களைச் சுற்றி ஒத்தடம் கொடுக்க-கொடுத்து வர தீரும்.

நோய்: கண் சிவந்து நீர் வடித லுக்கு:

மருந்து: பருத்தி விதைப்பருப்பு, மரமஞ்சள், திரிபலை (திரிபலா) இவை களை ஓர் நிறையாய் மை போல் அரைத்து பொடித்து கண்ணிலிட்டு மேலும் நத்தியா வட்டப் பூச்சாறு, சிப்பி நீர், பனைமட்டைச் சாறு, முலைப்பால் அல்லது ஆவின்பால்,

ஆவின்னெய் வகைக்கு கால்படி வீத மெடுத்து, ஒன்ருய்க் கலந்து அதில் சந்தனம், மரமஞ்சள், பனங்குறுத்து இவைகளை அரைத்த விழுது ஒவ்வொன்றும் ஒரு கழஞ்சு (கழஞ்சு—கழற்சிக் காயளவு) வீதம் மேற்கூறிய கலவையில் கலந்து காய்ச்சி வடித்து சிலதுளிகள் கண்ணில் விட்டும், தினமும் தலையில் தேய்த்து சிறிதுநேரம் ஊற வைத்தும் தலை முழுகி வர நோய் தீரும்.

நோய்: அந்தகக் கண்ணிற்கு (பார்வை இழந்த கண்):

மருந்து: கந்தகம், தங்கம் வகைக்கு கால் பலம், அஞ்சனக்கல், காரீய்யம் வகைக்குப் பலம் முக்கால், வெள்ளி, செம்பு வகைக்குப் பலம் அரை இவைகளையொன்ருய் குகையிலிட்டு உருக்கி பின் மயனமாய்ப் பொடித்துக் கண்களில் தூவி வர நோய் தீரும்—பார்வை திரும்பும்.

நோய்: வெள்ளெழுத்திற்கு:

மருந்து: ஒரு பெரிய பழத்தை (எலுமிச்சம்) எடுத்து ஒரு கெட்டியான நூலில் கோர்த்து, அப்பழத்தின் மேல் முடிந்தவரை நூற்றெட்டு கிராம்பை அழுந்த ஊன்றி விளாங்காய்ப் பிரமாணம் பசுவின் வெண்ணெய்க்குள் பொதிந்து. பழத்துடன் கூடிய கயிற்றின் முனையை ஒரு குச்சியில் கட்டி அக்குச்சியை ஒரு புதுச் சட்டியின் மேல் வைத்து, சட்டியின் அடிப்பாகத்தில் வெண்ணெய் படாதவாறு தொடங்க விடவேண்டும். அவ்வெண்ணெய் நன்ருய் முழுகும் வரை தண்ணீர் விடவேண்டும். பின் அச்சட்டியின் மேல் ஒரு பெரிய புதுச் சட்டியை கவிழ்த்து மூடவேண்டும். முதலில் கூறிய சட்டியில் உள்ள தண்ணீரை தினமும் வடித்து புதுத் தண்ணீர் ஊற்றவேண்டும். இப்படி நாற்பது நாட்கள் முடிந்தபின் அவ்வுருண்டையை வெளியிலெடுத்து பழத்தையும் கிராம்பையும் நீக்கி வெண்ணெய்யை மாத்திரம் எடுத்து செப்புச் சிமிழியில் அடைத்து வைத்துக்கொண்டு, சட்டிச்சாட்டரணைச் சாற்றில் கொஞ்சம் வெண்ணெயை மத்தித்து நாற்பத்தெட்டு நாட்கள் (தினமும்) கண்களில் தீட்டி வர வெள்ளெழுத்து மாறும். மற்ற கண் ரோகங்களும் தீரும்.

கண் வேதனை பலவற்றுக்கும் புறவளையம்

சிற்றுமணக்கின் வேரும், பேருமணக்கின் வேரும் ஓர் நிறையாய் எடுத்து, வேலிப்பருத்திச் சாற்றில் மைபோலரைத்துக் கலக்கி, குழம்பாய்க் காய்ச்சி கண்ணிற் புற வளையமிட்டு உச்சியில் தளமிட்டும் வரத் தீரும்.

கண் நோய்களுக்குத் தைலம்:

பொன்னுங்கண்ணி, சிறுகீரை, சிந்திற்கொடி, எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம் இவைகளின் சாறு, எள்ளெண்ணெய் வகைக்குபடி ஒன்று முத்தாக்காசு, கோஷ்டம், அதிமதுரம், ஏலம், சண்பகப்பூ, சிறு நாகப்பூ, லவங்கம் இவைகளை வகைக்கு அரைப்பலம் வீதமெடுத்து அரைத்து மேற்கூறியவற்றில் கலந்து காய்ச்சி வடித்து முழுகி வர பல விதமான ரோகங்களும் குணம் காணும்.

கண் நோய்களுக்கு இமையின் மேலிடும் பஞ்சு:

ஆவின்பாலில் உத்தா மணியின் வேரையரைத்து மேற்படி நெய்யில் போட்டுக் கலக்கி வேக வைத்து வடித்துக் கொண்டு இமையின் மேல் பாகத்தில் பூசி உலர வைத்து, மாலையில் சந்தனத்தை அரைத்து புறவளையமிட்டு உலர்ந்த பின் மேற்படி நெய்யில் பஞ்சை நனைத்து இமையின் மேற்போட்டு நித்திரை செய்ய குணம் காணும்.

கண்ணோய் உள்ளவர்கட்கு தலைக்குப் பதமிட (பூசிக்கொள்ள) குங்குமப்பூ தைலம்:

குங்குமப்பூ, மஞ்சிட்டி, சந்தனம், அரத்தை, வெட்டி வேர், விளாமிச்சம் வேர், அதிமதுரம், தாமரைக் கிழங்கு, வகைக்குப்பலம் இரண்டு. இவைகளை இடித்துப் பொடித்து மூன்றுபடி தண்ணீரில் போட்டு ஒரு படி தண்ணீராய் சுண்ட வைத்து வடிகட்டி, அதனுடன் ஒரு படி எள்ளெண்ணெயைக் கலந்து, மேற்படி திப்பியை நய்வாய் அரைத்து அதையும் மேற்படி கலவையில் கலந்து காய்ச்சி வடித்து தலைக்குப் பதமிட்டு வர கண்ணோய்கள் குறையும்.

கண்ணோய்க்கு மருந்தரைக்கும் பாத்திரம்;

வெங்கலக் கல்வமாயும், செப்புக் குழவியுமாய் இருத்தல் வேண்டும். கண்ணோய்களுக்கு அரைக்கு மருந்து களனைத்தையும் மேற்கூறிய பாத்திரம் அரைக்க வேண்டுமேயல்லாது வேறென்றிலும் அரைக்கலாகாது.

கண்களில் மருந்திட பொருந்தாக் காலம்:

கண்ணோய் உள்ளவர்கள் நெடுந்தூரம் வெய்யிலில் நடந்து அலுத்திருந்தாலும், லாகிரி வஸ்துக்களைப் (போதைப் பொருட்களை) புசித்திருக்கும் போதும், தைல ஸ்நானம் செய்து கொண்ட தினத்திலும், கண் வலித்த தினத்திலும் கண்களில் மருந்திடலாகாது.

கண்களில் மருந்திட்ட பின் கடைபிடிக்க வேண்டிய நெறிகள்:

காற்று வெய்யலில் அலையலாகாது. போதைப் பொருட்கள், கசப்பு, புளிப்பு, மிகுகாரம், குளிர்ந்த நீர் இவைகளை நீக்கி, ஆவின்பால், நெய் துவரை, பாசிப்பயிறு, சிறுகீரை, பொன்னுங்கண்ணி, முருங்கைக்கீரை, வாழைக்கச்சல் இவைகளை யுண்டுவரின் நல்லது. (தொடரும்)

## கோவில்களில் தேங்காய் உடைப்பது ஏன்?

தேங்காய்க்கு மேலே உள்ள பச்சை மட்டை மாயாமலம்: உரித்து எடுக்கின்ற நார்கள் கன்ம மலம்; சந்நிதியில் உடைகின்ற ஓடு ஆணவ மலம்: இந்த மூன்றும் நீங்கினுல் வெண்மையான பருப்பு வெளிப்படுகிறது. இறைவனிடத்தில் ''மும்மலத்தை நீக்கி, சுத்த சத்தத்தை அருளவேண்டும்'' என்று வேண்டுவதன் உட்பொருளாகும்.

திரு. வி. ராதாகிருஷ்ணன், சென்னை.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)
யில் நிலைபெறச் செய்து சிறந்து விளங்குமாறு வாழ்வோமாக.

''ஸத்யம் வத'', ''தர்மம் சர''|
(தை. உபநி. 1, 11)

இதுகாறும் வேத உப அங்கங்களைப் பற்றி ஆராய்ந்தோம். இனி உப வேதங்களாகிய 1. ஆயுர் வேதம், 2. அர்த்த சாஸ்திரம், 3. தனுர்வேதம் 4. கந்தர்வ வேதம் ஆகியவைகளைப் பற்றி விளக்குவோம்.

1. 'ஆயுர்வேதம்' என்பது விருத்தி பண்ணுவதற்கு வேண்டிய ஆரோக்கிய நெறி முறைகளையும், மருந்து வகைகளையும், மருத்துவ முறைகளையும் கூறும் சாஸ்திரமாகும். ''சரீரம் ஆத்யம் கலு தர்மஸாதனம்'' என்பது வேத வாக்கு. சரீரத்தைக் கொண்டு தர்மானுஷ்டானங்களை அநுஷ்டித்து நாம் ஆத்ம சிரேயஸைப் பெறவேண்டும். ஆதலால் நாம் சரீரத்தை நல்ல ஆரோக்கியமான நிலையில் வைத்திருக்க வேண்டும். சரீரம் நோய்வாய்ப்படின் ஜபம், யோகம், நிஷ்டை, ஞானப்பியாஸம் இவைகளை அநுஷ்டிக்க இயலாது. இவ்வுலக வாழ்க்கையையும் இனிது அநுபவிக்க இயலாது. எனவே இக பர சுகங்களைத் துய்ப்பதற்குச் சாதனமாகவுள்ள இச்சரீரம் திடமாக இருக்கவும், அதற்கு நோய் வராமல் தடுக்கவும், வந்த நோயைப் போக்கவும், ஆயுளை வளர்க்கவும், நல்ல உணவு நெறி முறைகளையும், மருந்துகளையும் மருத்துவ சிகிச்சை முறைகளையும் முறையாக ஆயுர்வேதம் நமக்குப் போதிக்கின்றது. ஆயுர்வேதத்தில் முக்கியமாக 'சரகம்', ஸுசுருதம்' என்னும் இரு புராதன நூல்கள் உள்ளன. அவைகள் ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு எழுதப் பட்டவை. நவீன மருத்துவ சாஸ்திரத்தில் உள்ளவைகளெல்லாம் அவைகளிற் காணலாம்.

மருந்துகளில் 'ஓஷதிவர்க்கம்', 'ரஸவர்க்கம்' என இரண்டுண்டு. செடி, கொடி மூலிகைகள் சம்பந்தப் பட்ட மருந்து ஓஷதிவர்க்கத்தைச் சேர்ந்தது. கந்தகம், பாஷனம், லோஹங்கள் சம்பந்தப்பட்ட மருந்துகள் ரஸவர்க்கத்தைச் சேர்ந்தன. இந்த ஓஷதி ரஸவர்க்கங்களைப் பயன்படுத்தி மருந்து செய்யும் முறைகளையும், அவைகளைப் பிரயோகிக்கும் மருத்துவ முறைகளையும் ஆயுர்வேதம் நன்கு விளக்குகின்றது. மருத்துவ முறைகள் பல. 'வமனம்' என்பது வாயிலெடுக்கச் செய்வது; 'விரேசனம்' என்பது மலம் இளக்கச் செய்வது; 'லேபம்' என்பது மேலே பூசச் செய்வது; 'ஸ்நேஹனம்' என்பது தைலத்தைத் தேய்க்கச் செய்வது; 'ஆக்ராணம்' புகையைமுகரச் செய்வது; 'சஸ்திர சிகிச்சை' செய்வது. இவ்வாறு பல சிகிச்சை முறைகளையும், அரிஷ்டங்கள், ஆஸவங்கள் தைலங்கள், கஷாயங்கள், குளிகைகள், சூர்ணங்கள், பஸ்மங்கள், லேஹ்யங்கள், ரஸாயனங்கள், கிருதங்கள் ஆகிய இன்னும் பலவகை மருந்து முறைகளையும் விஸ்தாரமாக ஆயுர்வேதத்தில் விளக்கப்பட்டுள்ளன. மற்றும் தேக தத்துவ சாஸ்திரம், பிராணி தத்துவ சாஸ்திரம், தாவர தத்துவ சாஸ்திரம், ரஸாயன சாஸ்திரம் ஆகிய இவைகளும் ஆயுர்வேதத்தில் இடம் பெற்றுள்ளன. பிராணிகட்கும், தாவரங்கட்கும் வரும் நோய்களைத் தடுக்க, நிவர்த்திக்க மருந்துகளும் மருத்துவ முறைகளும் ஆயுர்வேதத்தில் கூறப்பட்டுள்ளன. மருந்திற்குப் பத்தியம் அவசியம். 'பத்தியமில்லாத மருந்தும் சத்தியமில்லாத சொல்லும் பயன்படா' என்பது பழமொழி. இதையே தெலுங்கிலும் 'மந்துகு பத்யமு, மாட்டகு ஸத்யமு' என்று பண்டிதர்கள் கூறியுள்ளனர். எனவே பத்திய முறைகளையும், உணவு வகைகளையும் ஆரோக்கிய வாழ்விற்குகந்த நெறி முறைகளையும் விளக்கிக் கூறுகின்றது நம் ஆயுர்வேதம்.

பூர்வ மீமாம்ஸையில் சொல்லப்படும் தர்ம கர்மாநுஷ்டானத்திற்கும், உத்தர மீமாம்ஸையில் விளக்கப்படும் ஞான அநுஷ்டானத்திற்கும் இந்த சரீரம் முக்கிய சாதனமாகவுள்ளது. எனவே வேதாந்த நோக்குடன் பார்ப்பினும் சரீர ஸம்ரக்ஷணம் மிக முக்கியமானதாகும். அதற்கு உற்ற உறுதுணையாக விளங்குவது உபவேதமாகிய ஆயுர்வேதமேயாகும்.

2. 'அர்த்தசாஸ்திரம்' என்பது ராஜீய (Politics) சாஸ்திரமாகும். அர்த்தம் என்றால் பொருள். உண்ணும் உணவு உடுக்கும் உடை, வசிக்கும் வீடு ஆகியயெல்லாமே அர்த்தந்தான். இவைகளைப் பேணிக் காக்கும் வழி முறைகள் எல்லாம் அர்த்த சாஸ்திரத்திலுள்ளது. ராஜ்ய பரிபாலன முறைகளும், பிரஜைகள் கஷ்டப் படாமல் அவர்கள் உயிருக்கும் உடமைக்கும் பயமின்றி வாழவும், சுபிக்ஷம் நிலவவும், வலியவர்களால் எளியவர்க்கு இம்சையில்லாதிருக்கவும், நாட்டைச் சத்ரு அரசர்களிடமிருந்து காப்பாற்றவும், நீதி ஒழுங்கு நிலை நிறுத்தவும் தேவையான சட்ட திட்டங்களையும் வழி முறைகளையும் வகுத்துக் கூறுகின்றது இந்த சாஸ்திரம். சாம, தான, பேதங்களாகிய மூன்று உபாயங்களையும் இந்நூல் நன்கு விளக்குகின்றது: விரோதி அரசர்களைத் தண்டிக்கும் உபாயமாகிய யுத்தத்தைப் பற்றி 'தனுர் வேதம்' இயம்புவதால்,நாட்டிலுள்ள துஷ்டர்களை மாத்திரம் தண்டிக்கும் தண்டோபாயத்தை மாத்திரம் இந்நூல் இயம்புகின்றது. அரசன்பிரஜைகளையும், ராஜ்யத்தையும் சுபிக்ஷமாக வைத்துக் கொள்ளவும் வேண்டிய ராஜதந்திர முறைகளையும் இந்த சாஸ்திரத்தில் விளக்கமாகக் காணலாம். குற்றம் செய்யும் எண்ணமே ஒருவருக்கும் தோன்றாதிருக்கும் வழி வகைகளையும் சட்ட திட்டங்களையும் கூறுவது இதன் முக்கிய நோக்கமாகவுள்ளது. நம் நாட்டில் பண்டைய காலத்தில் ஆண்ட அரசர்களெல்லாம் கோர்ட்டு (Court) களை விருத்தி செய்யாமல் கோயில்களை விருத்தி செய்ததின் முக்கிய நோக்கம், பிரஜைகளின் உள்ளத்தில் தர்ம சிந்தனையும் சத்தியமும் வளர்ந்து நற்பண்புகளுடன் நல்வாழ்வில் நிலைக்கச் செய்வதற்காகவே யென்பதை நாம் மறந்து விடலாகாது. மனத்தூய்மையும், சித்த சாந்தியும் உண்டாகும் இடத்திற்குப் போவது குறைந்தால், தீய செயல்களும் குற்றங்களும் அதிகரித்துக் கொண்டே போகும். அதனால் பிரஜைகளுக்கும், அரசாங்கத்திற்கும் நிம்மதியிராது. இக்காரணம் பற்றியே ஸத்யம், பரோபகாரம் வளர, தர்மமும் சுபிக்ஷமும் நன்கு நிலவத் தகுந்த உபாயங்களை அர்த்த சாஸ்திரம் கூறுகின்றது. எனவே இது சிறந்த ராஜீய சாஸ்திரமாகும். சாணக்கியருடைய 'சாணக்கிய' தந்திரம் எனும்அர்த்தசாஸ்திரம் உலகப் புகழ்வாய்ந்ததாகும். 'சுக்கிர நீதி' என்றும் ஒரு அர்த்த சாஸ்திரம் உள்ளது.

3. 'தனுர் வேதம்' வில்வித்தைகளைப் பற்றிய சாஸ்திரம். 'தனுஸ்'

என்றால் 'வில்' என்று பொருள். யுத்தத்திற்கு வில் முக்கியமான ஆயுதம். இதிலிருந்துதான் தனுர்வேதம் என்ற பெயர் வந்தது. வேற்றரசர்களால் தேசத்திற்கு அபாயம் வரும்பொழுது செய்கிற தண்டோபாயத்தைக் கூறுவது தனுர்வேதம். யுத்த முறைகளையும், அஸ்திர சஸ்திரங்களாகிய ஆயுத விசேஷங்களைப்பற்றியும், ரத கஜ துரகபதாதி எனும் நால்வகைச் சேனைகளைப் பற்றியும் சேனைகளின் அணி வகுப்பு முறைகளாகிய வியூகங்களைப் பற்றியும் இந்நூல் விரிவாக விளக்குகின்றது.

ஆயுதங்கள் பொதுவாக இரு வகைப்படும். அவை அஸ்திரம், சஸ்திரம் எனப்படும். அஸ்திரம் என்பது கையை விட்டுச் செல்லுவது. அதர்வ வேத மந்திரங்களை அத்யயனம் பண்ணி சித்தி பெற்று, அவைகளை உச்சரித்துப் பிரயோகம் பண்ணினால் அந்த அஸ்திரம் மிகச் சக்தி வாய்ந்ததாக இருக்கும். எதிரிகள் அநேகமாயிரம் இருந்தாலும் எளிதில் ஸம்ஹாரம் செய்து விடும். ஒரு சிறு தர்ப்பையைக்கையிலெடுத்து அதர்வ மந்திரத்தை உச்சாரணம் செய்து பிரயோகம் பண்ணினாலும் அது பகைவனைத் தஹித்து விடும். 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்' என்ற பழமொழியே இதனாற்றான் தோன்றியது போலும். எனவே மந்திர சக்தியால் பிரயோகிப்பது அஸ்திரமாகும். சஸ்திரம் என்பது வெறும் பலத்தால் பிரயோகம்பண்ணுவது.இதுமூவகைப்படும். அவை 'முக்தம்' 'அமுக்தம்', 'முக்தாமுக்தம்' என்பவையாகும். முக்தம் என்பது கையை விட்டு எறிவது. அமுக்தம் என்பதுகையில்வைத்துக்கொண்டே சண்டை செய்வது. முக்தா முக்தம் என்பது கையிலும் இருக்கும், கையைவிட்டுச் செல்லும், திரும்பவும் கைக்கு வரும். அஸ்திரங்கள் பல வகைப்படும். அவைகளுள் ஒன்றுக்கொன்று விரோதம் அல்லது எதிர்ப்புத் தன்மையுண்டு. அக்னி அஸ்திரத்திற்கு வருணாஸ்திரமும், நாகாஸ்திரத்திற்கு காருடாஸ்திரமும் விரோதத்தன்மைகளாகும். அஸ்திரங்களுள் அதிக சக்தி வாய்ந்தது பிரம்மாஸ்திரமாகும். இப்பொழுது நவீன நம் விஞ்ஞான உலகில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள மிகப் பயங்கர சக்தி வாய்ந்த ஆடம் பாம் (Atom Bomb) அணுகுண்டு, ஹைட்ரோஜன் பாம் (Hydrogen Bomb) ஜல வாயு குண்டு, இவைகளெல்லாம் பல ஆயிர மாண்டுகளுக்குமுன்னே நடந்த தேவாஸுர யுத்தம், இராம ராவண யுத்தம், பாண்டவ கௌரவ யுத்தங்களில் உபயோகப்படுத்திய அக்னியாஸ்திரம் வருணாஸ்திரம் வாயு வாஸ்திரங்களின் அம்சமே யாகும் என்பது ஆராய்ச்சியாளர்கட்கு நன்கு புலனாகும். மற்றும் சேனைகளின் அணி வகுப்பு முறைகளில் பல யுத்த தந்திரங்களைக் கொண்ட வியூஹங்கள் உண்டு. தனுர் வியூஹம், காருட வியூஹம், பத்ம வியூஹம், சக்கர வியூஹம் இப்படிப் பல வியூஹங்கள் உண்டு. இதன் மூலம் எதிரியைச் சிக்கிக் கொள்ளும்படிச் செய்தல். இவைகள் எல்லாம் தனுர் வேதத்தில் கூறப்படுகின்றன. அரண்களைப் பற்றியும், அகழிகளைப் பற்றியும், யுத்தக் கருவிகளையும், வாகனங்களையும் பாதுகாத்துப் பராமரிக்கும் முறைகளைப்பற்றியும் அதிற்காணலாம். எனவே தனுர்வேதம் நாட்டின் பாதுகாப்பிற்கு இன்றியமையாததொரு சிறந்த சாஸ்திரமாகும். முற்காலத்தில் நம் நாட்டை யாண்ட அரசர்கள் எல்லோரும் வில் வித்தையில் அதாவது தனுர்வேதத்திற் சிறந்தவர்களாக விளங்கினர். நாட்டையும் குடிமக்களையும் ரக்ஷித்தனர்.

4. 'கந்தர்வ வேதம்' என்பது இந்திரியங்களுக்குச் சுகத்தைத் தரும் வித்தைகளைக் கூறும் சாஸ்திரமாகும். அறுபத்து நான்கு கலைகளுள் பல கலைகள் இக்கந்தர்வ வேதத்தில் அடங்கி விடுகின்றன. இந்திரியங்களுக்கு உத்ஸாகத்தைக் கொடுக்கும் விஷயங்களில் பொழுது போக்கிக் கொண்டிருப்பவர்கள் 'கந்தர்வர்கள்'. அதனாற்றான் இதற்குக் 'கந்தர்வ வேதம்' என்னும் பெயர் வந்தது.

கந்தர்வர்கள் தேவ ஜாதியினரில் ஒரு பிரிவினர். இவர்கள் வான சஞ்சாரிகள்; மிகவும் காந்தியும், பேரழகும் வாய்ந்தவர்கள். நமது ஊனக் கண்களுக்குப் புலனாகாதவர்கள். சில திவ்ய சக்ஷுஸு வாயக்கப்பெற்றுள்ள ஆத்மாக்களுக்கு மட்டுமே தெரிபவர்கள். இவர்கள் கானத்தில் மிகச் சிறந்தவர்கள். கந்தர்வ கானத்தைப் போல ஒரு கானம் பிரபஞ்சத்திலேயே இல்லையெனும் புகழைப் பெற்றவர்கள். இவர்களது கானகம் தேவர்களாலும் மிக விரும்பப் படுவதாகும். இவர்களது பெயரால் விளங்கும் இக்கந்தர்வ வேதமும் எல்லோராலும் இனிது விரும்பத் தக்கதாக வுள்ளது.

நடனம், கீதம், வாத்யம், சித்திரம், நாடகம், களியாட்டம், பொழுது போக்கு விளையாட்டு, விகடகவி, ஜாலம், சமையற்கலை, அலங்காரப் பொருட் கலை, ஒப்பனைக் கலை, ஸுகந்த பரிமள திரவியங்கள், கிரீடைகள், சதுரங்கம், மற்றும் இக்காலத்திய மன மகிழ்ச்சி மன்றங்கள், திரைப் படங்கள், அவை சம்பந்தப்பட்ட அரங்குகள், கேளிக்கைகள் ஆகிய இந்திரிய ஆனந்தத்திற்கு வேண்டிய கலைகள் அனைத்தும் இக்கந்தர்வ வேதத்தில் அடங்கும்.

எனினும் இச்சாஸ்திரத்தில் முக்கியமாக வுள்ளவை மூன்று. அவை நிருத்தம், கீதம், வாத்தியம் என்பவை. சீரிய நோக்குடன் ஆராயுங்கால் இம்மூன்றும் ஆத்ம லாபத்திற்குப் பெரிதும் துணைபுரிய வல்லாதாகின்றன. நிருத்தம் என்பது நடனம். நடன கலைக்கே ராஜாவாக வுள்ளவர் நடன சபாபதியாகிய நடராஜப் பெருமான். நடராஜரின் நடனம், அணுவிலிருந்து அண்டங்கள் வரை அசைந்து கொண்டேயிருக்கின்றன. அவைகளை அசைவிக்கும் ஆண்டவனும் அசைந்து கொண்டே யிருக்கிறான் எனும் மேலான தத்துவத்தை விளக்குகின்றது. அடுத்து கீதம் என்பது சங்கீதமாகிய கானம். நாரத கானம் நம்மை பக்திப் பெருநிலைக்கு அழைத்துச் செல்லுகின்றது. பக்தை மீராவின் இனிய கானம் ஸ்ரீ கிருஷ்ணனின் அருளையும், ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் சங்கீத நாத உபாசனை ஸ்ரீ ராம பிரானின் அருளையும் பெற்றுத் திகழ முடிந்தது. ஸரஸ்வதி தேவியின் கரத்திலுள்ள வீணையின் நாதமும் ஸ்ரீ கிருஷ்ணனின் குழலோசையும் எல்லாவுயிர்களையும் ஈர்த்து லயிக்கச் செய்வதாக விளங்குகின்றன. எனவே கந்தர்வ வேதம் இந்திரிய இன்பந் தருவதாக இருந்தாலும், அதைப் பயன்படுத்தும் சீரிய உயர் நோக்கத்தைப் பொறுத்து பேரின்பத்தையும் அடைவதற்குத் துணைபுரிகின்றது எனலாம். எனவே நமது சாஸ்திரங்களிற் கூறும் கலைகள் அனைத்தும் கலைகளின்மூலம் கடவுளைக் காண்பதாகவே அமைந்துள்ளது. இதுதான் நமது பாரத தேசத்தின் தனிக்கலைச் சிறப்பு.

**வாழ்க வேதம்! வளர்க வேத நெறி!**

சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு, கேது என்ற ஒன்பது கிரஹங்களும் அவரவர் ஜாதக ரீதியாக பலனை அளிக்கிறது. நவக்ரஹங்களை வணங்கு வதால் க்ருஹதோஷம் நிவர்த்தி ஆகும். மனிதர்கள் தங்களுக்கு உண் டாகும் தோஷங்களை ஜாதகம் மூலம் அறிந்து யாருக்கு சாந்தி செய்தால் தங்கள் தோஷம் நீங்குமோ அவ ருக்கு அதாவது அந்த கிரஹத்துக்கு வீட்டில் பூஜை செய்து தோஷத்தை நிவர்த்தி செய்வர். ஆனால் வாயில்லா பிராணிகளுக்கு உண்டாகும் தோஷங் களை நிவர்த்தி செய்யவே கோவில் களில் நவக்ரஹங்களை பிரதிஷ்டை செய்கின்றனர்.

# நவக்ரஹங்கள்

சூரியன் மேஷம் முதலிய ராசி களில் நுழைவதால் 12 மாதங்கள் கொண்ட வருடமும், இரண்டரை நக்ஷத்திரம் ஒரு ராசி ஆக 27 நக்ஷத் திரங்கள், 12 ராசிகள் உண்டாகியது. கீதையில் "கால: கலயதாம் அஹம்" எனக் கூறுகிறார். க்ருஹங்களது சல னமே க்ருஹசாரம் எனப்படுகிறது. ஆதலால் தான் நாம் துன்பம் அனு பவிக்கும் போது, 'என் போதாத காலம்; என் க்ருஹசாரம்; என் தலை எழுத்து, என் விதி' என்று சொல்லு கிறோம். நாம் செய்த நன்மை, தீமைக்கு ஏற்ப நமது ஜாதக கிரகங் கள் மாறுகிறது. பிரபஞ்சம் என்ற பாங்கில் எவன் புண்ணியம் என்ற பணத்தை போட்டு வைத்திருக் கிறானோ அவன் இந்தப் பிறவியில் அதற்கு ஏற்ப அனுபவிக்கிறான். அவன் செய்த புண்ணியத்திற்கு ஏற்ப கிர கங்கள் ஜாதகத்தில் அமைந்திருக் கிறது. நவக்ரஹ பூஜை செய்வதால் நமக்கு வர வேண்டிய துன்பம் குறை யும். "அதிதேவதா ப்ரத்யதி தேவதா ஸஹித சூர்ய க்ருஹாயகம்: என்று சொல்கிறோம் அல்லவா?

நவக்கிரஹங்களை வேண்டுவதால் பல துன்பம் மறையும் என்றாலும் சில பாவங்கள் அதாவது நாம் முன்பு செய்த ஊழ்வினைப் பயன் சில அனு பவித்தே ஆக வேண்டும். விதியை ஒருவராலும் மாற்ற முடியாது. எவ்வளவுதான் பொருத்தம் பார்த்து திருமணம் செய்தாலும் அவளுக்கு அல்லது அவனுக்கு கெடுதல் இருந் தால் வந்தே தீரும். அதனால்தான் சில திருமணம் ஜாதகம் பார்த்து ஆராய்ந்து நடந்தாலும், சில இடங் களில் அசம்பாவிதம் நடக்கிறது. அந்த விதியானது சோதிடரின் கண்ணை மறைக்கிறது. தசரதர், இராமனின் பட்டாபிஷேகத்திற்கு சிறந்த நாள் பார்த்து பல ஸாஸ்திர ஆலோசனை பேரில் குறிப்பிட்ட நாளில் பட்டம் கட்ட ஏற்பாடாக் கினார். ஆனால் விதியின் பயனால் இராமர் அன்று காட்டுக்குப் போக, தசரதரின் ஈமச் சடங்கு அன்று நடந்தது.

நவக்ரஹங்களை திருப்தி செய்தால் வரவிருக்கும் துன்பம் சற்று குறை யும். எப்பொழுதுமே நவக்ரஹ பூஜை செய்ய வேண்டும். ஒரு காரியம் ஆவதற்காக மட்டும் ஒருவரிடம் பழ காமல், எப்பொழுதுமே அன்பாக பழகினால் அவர்கள் நமக்கு நன் மையை தானே செய்வர்? அதுபோல எந்த க்ருஹத்தால் தீங்கு என்பதை அறிந்து பிறகு செய்வதைவிட அடிக் கடி நவக்ரஹ பூஜை செய்தால் துன்பம் குறையும். நாம் முன்பு செய்த பாவம் எத்தகையது என்பது நமக்குத் தெரியாதல்லவா?

ஒரு வஸ்திரத்தில் அக்ஷதையை பரப்பி அதில் நவக்ரஹ ப்ரதிமைகளை ப்ரதிஷ்டை செய்து அதையும் பூஜை செய்து ஹோமம் ஆனவுடன் நவக்ர ஹங்களுக்குரிய தான்யத்துடன் நவ க்ரஹ ப்ரதிமைகளையும், நவக்ரஹ ரூபமாக நினைத்து ப்ராமணர்களுக்கு தானம் செய்ய வேண்டும். நாம் இவர்களுக்கு கொடுப்பது எப்படி அவர்களுக்குப் போய் சேரும் என்று சிலர் கேட்கலாம். அமெரிக்காவில் இருக்கும் நண்பர் ஒருவர் அனுப்பும் 'டாலர்' எப்படி மொழி, இடம் எல் லாம் மாறி இங்கு ரூபாயாக அடை கிறதோ அதுபோல நாம் செய்யும் தானம் உரியவருக்கு போய் சேரும்.

சூரியன், சந்திரன் இரண்டும் மண் டலக்ரஹம். அங்காரன், புதன், குரு, சுக்கிரன், சனி தராக்ரஹம், ராகு, கேதுக்கள் சாயாக்ரஹம் என்றும் கூறப்படுகிறது. நவக்ரஹ ஹோமத்தை துன்ப சாந்திக்காகவும், கர்மாவிற்கு அங்கமாவும், சுப கர் மாவாகவும் செய்கிறோம். குழந்தை பிறந்து ஒரான்டு முடிந்தவுடன் ஆயுஷ்ய ஹோமத்துடன், நவக்ரஹ ஹோமமும் செய்கிறோம். அதே போலவே ஒருவர் மரணம் அடைந்த பிறகு ஒரான்டு பூர்த்தி ஆனவுடன் 'ஆப்திகம்' எனும் கர்மாவை நடத்தி மறுநாள் 'சுபஸ்வீகர்ணம்' என்னும் பெயரால் நவக்ரஹ ஹோமமும் செய்கிறோம். இதற்கு 'க்ருஹயக்ஞம்' என்று பெயர். க்ருஹங்களை நாடி க்ருஹத்தில் (இல்லத்தில்) செய் வதால் 'க்ருஹயக்ஞம்' என்கிறோம்.

---

திருமதி. உமாஹரிஹரன்,
அலிபி.

---

தாய் வயிற்றிலிருந்து பிறந்த படியே இருக்க இயற்கை இடம் தரு வதில்லை. இயற்கையாக சில அம்சங் களை உண்டாக்கி செயற்கையால் சில வகைகளை கொண்டு நன்மை பெற பொருளையும் தருகிறார். இயற்கை யில் கிடைக்கும் தங்கத்தை செயற் கையால் மெருகு கொடுத்து அழகு பெறச் செய்வது போல, மனிதன் பிறக்கும் போது இருந்த, கர்ம வினைப்பயனை நீக்க கர்மாக்களால் தான் முடியும்.

அவரவர் கர்மாக்களுக்கு தக்க வாறு நவக்ரஹங்களை ஸ்துதினாலோ, பூஜையினாலோ, நவக்ரஹ ப்ரதக்ஷி ணம் செய்வதினாலோ வழிபட்டு கெட்ட பலன்களை அகற்றி நல்ல பலன்களை அடைவீர்களாக.

இனி நவக்ரஹங்களை தனித் தனி யாக காண்போம்.

## சூரியன்

நவக்ரக தெய்வங்களில் முதலாவ தாக இருப்பவர் சூரியன். இவரது கோத்ரம் காச்யப்ப கோத்ரம். காச் யப்பரது மனைவி கர்பமாக இருக்கும் போது கணவனுக்குத் தவறாமல் பணி விடை செய்து வந்தாள். இவளை சோதிக்க எண்ணிய தர்ம தேவதை கள் அதிதியை போல வந்து "பவதி பிக்ஷாம் தேஹி" என்றார். கர்ப்பிணி யானதால் மெல்ல வந்து அதிதிக்கு உணவு அளித்தார். 'கணவருக்கு உணவு கொடுக்கும் போது தாமதித் தால் நியாயம், ஆனால் கருவை

காக்க நினைத்து மெல்ல வந்ததால் உன் கரு இறக்கட்டும்' என்று சபித்தார். 'இதை அறிந்த கணவர் ஆகாயத்திலிருந்து உனக்கு ஒரு குழந்தை பிறக்கும்' என்று சமாதானப்படுத்தினார். அப்படி பிறந்தவனே சூரியன் ஆவான்.

அநேக நோய்களை நீக்கி ஆரோக்கியம் அளிப்பவர் சூரியன். ஆகவே தான் ஆரோக்கியத்தைப் பாஸ்கரனிடம் இருந்து பெறு என்று சாஸ்திரம் கூறுகிறது. குஷ்ட நோய் உள்ளவர்கள் சூரிய பூஜை, சூரிய புராணம் படிப்பதால் படிப்படியாக குணமாவதை பலர் சொல்லக் கேட்டிருக்கிறோம். கிருஷ்ணனுடைய புத்திரனுக்கு (ஸாம்பனுக்கு) குஷ்டரோகம் உண்டான போது சூரிய பூஜை, சூரிய நமஸ்காரம் செய்ததால் மறைந்தது. இதனால் சூரிய பூராணத்துக்கு ஸாம்ப பூரான் என்ற பெயரும் உண்டு, ராவணனுடைய தலையை ஸ்ரீராமர் அறுக்க அறுக்க வளருவதை கண்டு வருந்தியபோது அகஸ்தியர் ஆதித்ய ஹ்ருதயத்தை உபதேசித்தார். அதைக் கூறியதால் தான் ராவணனை வெல்ல முடிந்தது என்று சூரியனுடைய மகிமையை வால்மீகி இராமாயணத்தில் கூறுகிறார். கேரளாவில் சிறியவர், பெரியவர் என்ற வேறுபாடின்றி அனைவரும் சூரிய நமஸ்காரம் செய்வதை, அதிகாலையில் கோவிலுக்கு சென்றால் இன்றும் காணலாம்.

சூரியனே முழு முதற் கடவுள். நவக்கிரகங்களில் நடுவில் கிழக்கு முகமாக வட்ட வடித்தில் வீற்றிருப்பவர். சிம்ம ராசி சொந்த வீடு மேஷ ராசியில் 10° உச்சம். ஜாதகத்தில் சூரியன் உச்சனாக இருந்தால் படிப்புள்ளவர்களாகவும், பக்தி மான்களாகவும், பலசாலிகளாகவும் இருப்பார்கள். சூரிய மண்டலத்தின் இடையே ஸ்ரீமன் நாராயணன் இருப்பதாகவும், பரமேஸ்வரன் இருப்பதாகவும், மும்மூர்த்திகளின் உருவமே சூரியன் என்றும் சில புராணங்கள் கூறுகிறது. சூரியனே மற்ற கிரகங்களுக்கு ஒளியைத் தந்து தன்னை சுற்றச் செய்கிறார். எல்லா 12 ராசிகளிலும் சூரியன் சஞ்சரிப்பதால் சித்திரை முதல் பங்குனி வரை 12 மாதங்கள் தோன்றியது.

ஏழு குதிரைகள் பூட்டிய ஒரே சக்ரமுள்ள தேரில் இருப்பவர். விசாக நக்ஷத்திரத்தில் பிறந்தவர். அக்னியில் பிரியமுள்ளவர். இவர் பூஜிக்கும் தேவதை சிவன். பிரியமான தானியம் கோதுமை, எருக்கை, ஸமித்து, செந்தாமரை சிவப்பு வர்ணம், தாம்பர உலோகம் இவருக்கு பிடித்தது. இவர் க்ஷத்திரிய ஜாதி. குணம் குரூரர். இவருடைய கிரக தேவதை சிவன். வாகனம் மயில், தேர். இவருக்குப்பிடித்தசுவைகாரம். ரத்தினம், மாணிக்கம் இவருக்கு பிடித்தது. சூரிய தோஷம் இருந்தால் ஹோமம் செய்து தாம்பரத்தில் சூரியபகவானின் பிரதிஷ்டை செய்து அவருக்குப் பிடித்த சிவப்பு வர்ண துணியால் சுற்றி கோதுமை தானம் செய்யவேண்டும், இவருக்கு உரிய மொழி சமஸ்கிருதம். அக்னியை வழிபட்டால் இவருக்குமகிழ்ச்சி.

சூரிய திசைக்கு சாந்தி ஸ்ரீ வால்மீகி ராமாயணம் பாலகாண்டம் 43 வது சர்க்கம், கங்காவதார பாராயணமுமாகும். சூரிய பகவான் இருக்கும் ஸ்தலங்கள்; கூடலையாற்றூர், திருக்கலயநல்லூர், சூரிய நாராயணன் கோவில், திருக்கருப்பறியலூர் திருமியச்சூர், திருப்புனவாயில், திருப்பரிதிநியமம், திருச்செம்பொன் பள்ளி, திருநெல்லிக்கா தஞ்சை சூரியனார் கோவில் முதலியன.

ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் இயற்றிய சூரிய நாராயணன் கீர்த்தியை ஞாயிற்றுகிழமை பாடினால் துன்பம் அகலும்.

## சூரியன் (ஞாயிற்றுக் கிழமை)

ராகம்: சௌராஷ்டகம் தாளம்: த்ருவம்

**பல்லவி**

சூர்ய மூர்த்தே நமோஸ்துதே
சுந்தரச்சாயா திபதே.
(சூர்ய)

**அனுபல்லவி**

கார்ய கபரணாத்மக ஜகப்பரகாசக
சிம்க ராச்ய திபதே
ஆர்ய வினுத தேஜஸ் பூர்த்தே
ஆரோக்யாதி பலதகிர்த்தே
(சூர்ய)

**சரணம்**

ஸாரஸ மித்ர, மித்ர பானோ ஸஹஸ்ர
கிரண கர்ண ஸூனோ
க்ரூர பாபஹரக்ருசானோ குருகுக
மோதித ஸ்வபானோ
ஸூரஜனேடித ஸுதினமணே
ஸோமாதிக்ரஹ சிகாமனே
தீ ரார்சித கர்மஸாக்ஷிணே திவ்யதர
ஸப்தாஸ்வ ரதி நே
ஸௌராஷ்ட்ரார்ண மந்த்ராத்மனே
ஸௌவர்ணஸ்வ ரூபாத்மனே
பாரதீச ஹரிஹராத்மநே பக்தி, முக்தி
விதரணாத்மநே
(சூர்ய)

### சூர்ய கீர்த்தனத்தின் அர்த்தம்:

அழகான சாயா தேவியின் கணவரான சுந்தரமூர்த்திக்கு என் நமஸ்காரம். கார்யகாரண ரூபமாக இருப்பவரும், உலகத்துக்கு பிரகாசத்தை கொடுப்பவரும், சிம்மராசிக்கு அதிபதியும், உயர்ந்தோரால் துதிக்கப்பட்ட தேஜஸை உள்ளவரும், ஆரோக்கியம், முதலிய பலன்களை அருளும் கீர்த்தி உடையவருமான சூர்ய மூர்த்திக்கு என் நமஸ்காரம்.

தாமரைக்கு நண்பரும், உலகத்துக்கு நண்பரும், பிரகாசிக்கும் ஆயிரம் கிரணங்கள் உடையவரும், கர்ணனைப் புத்திரனாக உடையவரும், கொடூரமான பாபங்களை போக்கடிப்பவரும், அக்னி ரூபமாய் இருப்பவரும், குருகுஹருக்கு சந்தோஷம் உண்டுபண்ணுபவரும், பகலை உண்டு பண்ணுபவரும், ஞானிகளால் ஸ்துதிக்கப்பட்டவரும், இரத்தினம் போன்றவரும், சந்திர கிரகங்களுக்குத் தலைவரும், தீரர்களால் பூஜிக்கப்பட்டவரும், மக்களுக்கு எல்லா காரியங்களுக்கும் சாட்சியாக இருப்பவரும், 7 குதிரைகள் பூட்டிய தேரில் வருபவருமான, மும்மூர்த்திகளின் ஸ்வரூபமாக இருப்பவரும், பக்தி-முக்தி இவைகளை அளிப்பவருமான சூரிய பகவானே உனக்கு நமஸ்காரம்.

### கீர்த்தனத்தின் பலன்

தினமும் காலையில் குளித்தவுடன் இதைப் பாடினால் சகல வியாதிகள் நீங்குவதுடன், சகல சம்பத்துக்களும் கிடைக்கும்.



# திருமாலின் திரு அவதாரங்கள்

புலவர். மா. சீதாராமன் M.A., B.Ed.
பெருங்கட்டூர்.

## பால் நிறவண்ணன் !

சீர்மேவு வேங்கடமேல் உறைவோனே!
சீரடியை அடைந்த பேரைப்
பார்மீது பழிவந்து தாக்காமல் காப்
பாற்றும் பரமா! நாளும்
யார்மீதும் குறைகண்டே என்வாழ்-
நாள் கழித்தேன்!என் குற்றம்
காணேன்!
ஏர்மேவும் பலராமப் பெருமானே!
என்னையறியும் ஞானம் அருளே!

(மாருதிதாசன்)

திருமாலின் திருஅவதாரங்களுள் எட்டாம் அவதாரம் பலராம அவதாரம். இராமன் என்ற பெயரைக் கொண்ட அவதார மூர்த்திகள் மூவர். பரசுராமர், சீதாராமர், பலராமர் எனப்படும் இராமர் மூவருள் கடைசி இராமர் பலராமர். நாம் ஒன்பதாம் மூர்த்தியாகக் கொண்டாடப்படும் கண்ணனுக்கு அண்ணன் இவர். அண்ணனாக இருந்து பலராமர் என்னும் பெயரையும், தம்பியாக இருந்து கண்ணன் எனும் பெயரையும் தாங்கி நிற்கிறார் திருமால்! பரசுராமரும் சீதாராமரும் ஒருவரையொருவர் ஒரே நேரத்தில் சந்தித்துக் கொள்வதைப் போலவே,பலராமரும் கண்ணபிரானும் ஒரே சமயத்தில் இணைந்து வாழ்தலையும் கண்டு இன்பமடைகிறோம். இப்பலராம அவதாரம் பற்றிய வரலாற்றைச் சிறிது காண்போம்:

இராமாவதாரத்தில் ஆதிசேடனது அம்சமாகத் தோன்றியவர் இலக்குமணப் பெருமாள். இரவு பகலாகத் தன்னைப் பிரியாது நின்று பணிவிடை செய்த இலக்குமணப் பெருமானுக்குத் தன் நன்றிக் கடனைச் செலுத்த எண்ணினார் இராமர்! எனவே, தம்பியைப் பார்த்துக் கூறுகிறார்.

"தம்பி இலக்குமணா! இந்த இராமாவதாரத்தில் எனக்குத் தம்பியாகப் பிறந்தாய்! என்னோடு இணை பிரியாது வாழ்ந்தாய்! இரவென்றும் பகலென்றும் பாராது எனக்குத் தொண்டுகள் புரிந்தாய்! எனக்கு இனிய உயிராக அமைந்தாய்! உலகோரும் 'இராமலக்குமணர்' என நம்மிருவரையும் இணைத்துக் கூறுவதில் இன்பம் கண்டனர். உன்னைப் போன்ற தம்பியை இந்த உலகத்தில் வேறு யாரே பெற்றனர்? எனவே, அடுத்த அவதாரத்தில் நான் உனக்குத் தம்பியாகப் பிறக்கப் போகிறேன். நீ அண்ணனாகப் பிறக்க வேண்டும். உனக்கு நான் அப்போது தொண்டுகள் புரிவேன்! அப்போது தான் என் நன்றிக் கடன் தீரும். இல்லையேல், நன்றி கொன்ற பாவத்துக்கு நான் ஆளாவேன். நன்றியை மறப்பவர் யாவராயினும் அவருக்கு உய்வு என்பதே இல்லையென்பது உண்மையல்லவா? எனவே, நீயும் நானும் அடுத்த பிறவியிலும் அண்ணன் தம்பியாகவே பிறப்போம்!"

"நன்றி மறப்பது நன்றன்று!" என்பதை உலகுக்குணர்த்தத் தானே நடந்து காட்டினார் திருமால்! அவதாரத்திற்குரிய நேரம் வந்தது!

இராமாவதார காலத்தில் இராம-இராவண யுத்தத்தில் மாண்டு போன அரக்கர்கள் மீண்டும் உலகில் பிறவியெடுத்தனர். க்ஷத்திரிய மரபில் பிறந்த இவர்கள் உலக மக்களுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கினர். பூர்வ ஜென்ம வாசனை இவர்களைவிட்டு நீங்கிய பாடில்லை.எனவே, இவர்களையடக்கத் திருமால் திருவுளம் கொண்டார். எனவே, முன்னேற்பாடாகத் திருமால்ஆதிசேடனை அழைத்துக் கூறினார்:

"ஆதிசேடனே! பூவுலகில் கொடியோரின் செல்வாக்கு மேலோங்கி வருகிறது. இனியும் நாம் சும்மா இருப்பதற்கில்லை: நீ போய்ப் பூவுலகில் வசுதேவருக்கும் தேவகிக்கும் பிள்ளையாகப் பிறப்பாயாக!" எனப் பணித்தார்.

அப்போது, வட மதுரையில் வசுதேவர் என்னும் பெயருடைய யது குலதிலகர் வாழ்ந்து வந்தார். அவர் மனைவியார் தேவகி. திருமாலின் ஆணைப்படித் தேவகியின் கருவில் ஆதிசேடன் வந்து தங்கினார். பின்னர், யோக மாயையைத் திருமால் அழைத்தார். தேவகியின் வயிற்றில் ஆறுமாதக் கருவாக வளர்ந்திருக்கும் பிண்டத்தை அப்படியே எடுத்து ரோகிணியின் வயிற்றில் சேர்க்குமாறு ஆணையிட்டார். ரோகிணி என்பவள் வசுதேவருடைய முதல் மனைவி. ரோகிணி நந்தகோபனுடைய கோகுலத்தில் வசித்து வந்தாள். ரோகிணியின் வயிற்றில் சேர்ந்த கரு உரிய காலத்தில் ஆண் மகவாக அவதரித்தது. பூரண சந்திரனைப் போல் பிரகாசித்த அக்குழந்தைக்குப் பலராமன் எனத்திருநாமம் இட்டு வளர்த்தனர். அக்குழந்தையின் தெய்வீக அழகில் மயங்கி ஆனந்தக் கடலில் மூழ்கியிருந்தாள் ரோகிணி!

நாட்கள் சில கடந்தன. வசுதேவர்க்கும் தேவகிக்கும் மைந்தனாகத் திருமால் திருஅவதாரம் செய்தார். ஆனால், நந்தகோபனுக்கும் யசோதைக்கும் வளர்ப்பு மகனாக வளர்ந்து வந்தார். அண்ணன் பலராமனும் தம்பி கண்ணனும் நந்தகோபனுடைய ஆயர்ப்பாடியில் இணைந்தே வளர்ந்து வந்தனர். இவர்களின் இளமைப் பருவ விளையாட்டுக்களில் ஈடுபட்டு ஆயர்ப்பாடிப் பெண்

களும் ஆண்களும் தம்மையே மறந்து இன்பத்தில் மூழ்கலாயினர்.

பலராம அவதாரம் ஆதிசேடனின் அம்சமே என்றாலும், பகவானின் ஆற்றலும் கலந்து காணப்பட்ட அவதாரம்! எனவேதான், பலராம அவதாரத்தையும் திருமால் அவதாரமாகவே கருதி உலகம் வழிபட்டு வருகின்றது. எனினும், கிருஷ்ணவதாரம் போன்று பூர்ணவதாரமாகப் பலராம அவதாரத்தைக் கருதுவதற்கில்லை. பலராமர் மூத்தவராகத் தோன்றிய போதிலும், தம்பிக்குத் துணைபுரியும் அண்ணனாகவே வாழ்ந்து காட்டினார். கண்ணனோ அண்ணனுக்கு அடங்கிப் பணிவிடை செய்ய முனைகிறார். ஆனால், பலராமனோ தம்பிக்கு அடங்கிய அண்ணனாகக் காட்சி தருகிறார். எனவேதான், பலராமரை "நம்பி மூத்தபிரான்!" என வைணவ உலகம் ஏத்திப் புகழ்கிறது.

இளம்பிராயம் முதற்கொண்டே இருவரும் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிவதில்லை. ஒன்றாகவே உண்பர்; ஒன்றாகவே உடுப்பர்; ஒன்றாகவே விளையாடுவர்; ஒன்றாகவே உறங்குவர். ஆனால், நிறத்தாலும் குணத்தாலும் வேறுபட்டே காணப் பட்டனர். பலராமரோ பால் நிறமேனியர். கண்ணனோ கார்மேக வடிவினன். எள்ளும் பச்சரிசியும் கலந்தாற் போன்ற நிலை. பலராமரோ பரமசாது. கண்ணனோ மிகவும் குறும்பு. ஆனாலும், தளர்நடைப் பருவத்தில் பலராமர்தான் 'மொடு மொடு' என விரைந்து ஓடுவாராம். நடக்கச் சக்தியில்லாத கண்ணன் தத்தித் தளர் நடையிட்டும் பலதேவனைத் தொடர்ந்து செல்வாராம்! பலதேவன் ஓடுவது வெள்ளி மலையொன்று விரைந்து ஓடுவதைப் போல இருக்குமாம். கண்ணன் அடியெடுத்து வைப்பது, அவ்வெள்ளி மலையைத் தொடர்ந்து கரியமலையொன்று பெயர்ந்து நகருவதைப் போலக் காணப்படுமாம்! இக்காட்சியை எழிலுறச் சித்திரிக்கும் பெரியாழ்வாரின் அமுதப் பாடல் இதோ:

முன்நல்ஓர் வெள்ளிப் பெருமலைக்
குட்டன் விரைந்து ஓடப்
பின்னைத் தொடர்ந்ததோர் கருமலைக்
குட்டன் பெயர்ந்து அடியிடுவதுபோல்
பன்னி உலகம் பரவி ஓவாப் புகழ்ப்
பலதேவன் என்னும்
தன்நம்பி ஓடப் பின்கூடச் செல்வான்
தளர்நடை நடவானோ!

(5, தளர் நடைப்பருவம், பெரியாழ்வார் திருமொழி.)

பலராமர் கலப்பையை ஆயுதமாகக் கொண்டவர். அழகிய பனைக் கொடியை யுடையவர். பலராமரின் ஆற்றலை விளக்கும் நிகழ்ச்சி ஒன்றைக் காண்போம்.

ஒரு சமயம், பலராமர் யமுனையாற்றங்கரைப் பக்கமாகச் சென்று கொண்டிருந்தார். யமுனை யாற்றில் நீராட விரும்பினார். தான் இருக்கும் இடத்துக்கு வருமாறு யமுனையை அழைத்தார் பலராமர்! ஆனால், யமுனையோ பலராமரின் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கவில்லை. மது மயக்கத்தால் பலராமர் இப்படிப் பேசி அழைக்கிறார் என எண்ணியது. எனவே, தன் போக்கில் அது ஓடிக் கொண்டிருந்தது. யமுனை தன்னை நோக்கி வராமல் சென்று கொண்டிருப்பதைப் பலராமர் கண்டார்; வெகுண்டார்; கலப்பையைக் கையில் எடுத்தார்; கலப்பையின் நுனியினாலே யமுனையைப் பற்றியிழுத்தார். எனவே, தன் போக்கை யமுனை மாற்றிக் கொண்டது; பலராமர் இருந்த இடத்துக்குத் தானே வந்து பாய்ந்தது. பின்னர், யமுனை அழகிய பெண் வடிவம் தாங்கி நின்றது. நடுங்கிப் பலராமரின் திருமுன்னர் வணங்கி நின்றது. தன் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டிக் கொண்டது. எனவே, பலராமர் யமுனையை மன்னித்தருளினார். பின்

னர் சாந்தமடைந்து அந்த யமுனை யாற்றில் நீராடி மகிழ்ந்தார். இவ்வாறு, பலராமர் தன் ஆற்றலையும் தன் ஆயுதமாகிய கலப்பையின் ஆற்றலையும் உலகுக்கு வெளிப்படுத்தி வளர்ந்து வந்தார்.

பலராமர் இவ்வாறு வளர்ந்து வரும் நாளில், அத்தினாபுரியில் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று அவர் செவிக்கு எட்டியது. அது என்னவென்று காண்போம்.

திருதராட்டிரனின் மக்கள் கௌரவர் எனப்படுவர். அவர்கள் நூறு பேர். அவர்களுக்குள் மூத்தவன் துரியன். துரியனுக்கு இலட்சணை என்பவள் மகள். அவளுக்குத் திருமணப் பருவம் வந்துற்றது. எனவே, அக்காலவழக்கப்படி இலட்சணைக்குச் சுயம்வரம் நடத்தத் துரியன் ஏற்பாடுகள் செய்தான். சுயம்வரத்திற்குப் பலநாட்டு இளவரசர்களும் வருகை புரிந்தனர். அவர்களுள் ஒருவன் சாம்பன்.

கண்ணபிரானின் மனைவியருள் ஒருத்தி சாம்பவதி, கண்ணபிரானுக்கும் சாம்பவதிக்கும் பிறந்த மகனே சாம்பன். இலட்சணையின் சுயம்வரத்துக்குச் சென்ற சாம்பன் அவளைப் பலாத்காரமாகத் தூக்கி வருவதற்கு முற்பட்டான். இதனைக் கண்ட துரியனும் அவன் தம்பியர் பலரும் சாம்பனை எதிர்த்துப் போரிட்டனர். போர் கடுமையாக நடைபெற்றது. போரில் சாம்பன் தோல்வியுற்றான். எனவே, சம்பனைத் துரியன் கைது செய்தான்; சிறையில் வைத்தான்.

சாம்பன் கைதான செய்தி பலராமருக்கு எட்டியது. தன் தம்பி மகன் துரியனால் கைது செய்யப்பட்டதறிந்து உள்ளந்துடித்தார். தன் தம்பியாகிய கண்ணனுக்குப் பாதுகாவலாக இருந்து வருவதைப் போலவே, சாம்பனுக்குப் பாதுகாவல் அளிக்கவும் தான் உடனே புறப்பட்டார். கோகுலத்தில் இருந்தவர்கள் பலராமருக்குத் துணையாக வருவதாகச் சொல்லினர். ஆனால், பலராமரோ அவர்களைத் தடுத்து நிறுத்தி விட்டுத் தான் ஒருவராகவே புறப்பட்டார்.

பலராமர் அத்தினாபுரத்தை அடைந்தார். சாம்பனை விடுவிக்குமாறு துரியனைக் கேட்டுக் கொண்டார். துரியனா விடுபவன்!

"எங்கள் குலக்கொடியைக் கவர்ந்து செல்ல முற்பட்டவனை நாங்கள் லேசில் விடமாட்டோம்!" எனத் துரியோதனாதியர் நூற்றுவரும் ஒரே கட்டுப்பாட்டுடன் கூறிவிட்டனர். மேலும், பலவாறு இகழ்ந்து பேசவும் தலைப்பட்டனர். எனவே, பலராமருக்கு அளவு கடந்த கோபம் உண்டாயிற்று.

"கொடியவர்களே! ஆட்சியில் இருக்கிறோம் என்ற அகம்பாவத்தால் என் தம்பி மகனைக் கைது செய்து விட்டீர்கள். நான் வேண்டிக் கொண்டும் அவனை விடுவிக்காமல் வீண் வார்த்தை பேசுகின்றீர்கள். உங்களுக்கு அழிவுக் காலம் நெருங்கி விட்டது. நீங்கள் அரசாண்டு வரும் இந்த அத்தினாபுரியை அடியோடு பெயர்த்துக் கங்கையில் கவிழ்க்கிறேன்! குருகுலத்தாராகிய உங்கள் வம்சமே இல்லாமல் போகும்படியும் செய்துவிடுகிறேன்! என் வலிமையை இப்போதே உங்களுக்குக் காட்டுகிறேன்!"

இவ்வாறு வெகுண்டு கூறிய பலராமர் தன் படையாகிய கலப்பையைக் கையில் தாங்கினார், அத்தினாபுரியின் மதில்மேல் உள்ள நாஞ்சில் என்னும் பகுதியைத் தன் கலப்பையால் மாட்டியிழுத்தார். அதனால், அந்நகரமே ஆட்டங்கண்டது. தங்கள் நகருக்கு ஏற்பட்ட ஆபத்தையுணர்ந்த துரியோதனாதியர் பலராமரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். தங்கள் பிழையைப் பொறுத்தருளுமாறு வேண்டினர். சாம்பனையும் விடுதலை செய்து பலராமர் முன் கொண்டு வந்து விட்டனர். இதனால் பலராமரின் சினம் ஒருவாறு தணிந்தது. நாஞ்சிலில் மாட்டிய கலப்பையைத் திரும்பவும் எடுத்துக் கொண்டார். எனவே, ஆடி அசைந்த அத்தினாபுரி ஒருவாறு தன் நிலைக்கு வந்து சேர்ந்தது.

இவ்வாறு பலராமர் தன் ஆற்றலை வாய்ப்பு நேரும் போதெல்லாம் வெளிப்படுத்தி வரலானார். பலராம அவதாரத்தின் நோக்கம் கண்ணபிரானுக்கு உற்ற துணையாக இருந்து உதவி செய்ய வேண்டும் என்பதே! தான் அண்ணனாக இருந்தாலும், ஆற்றல் மிக்க தன் தம்பியாகிய கண்ணனுக்கு அடங்கிச் செல்வதே பலராமரின் எண்ணமாக இருந்து வந்தது. திறமைக்கு அடங்கிச் செல்வது தானே அறிவுடைமை! மேலும், ஒரே நேரத்தில் இரண்டு தலைவர்கள் தம் ஆற்றலைக் காட்டிப் போட்டி போடுவது அழகாயிராதன்றோ! எனவேதான், பலராமர் தன் தம்பிக்கே சகல உரிமைகளையும் கொடுத்துத் தான் கட்டுப்பட்டவராகவே வாழ்ந்து வந்தார்.

கண்ணனுக்கோ அண்ணன் பலராமருக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்ற விருப்பம்! இந்த அண்ணன் தம்பியாரின் உறவு நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றதன்றோ!

அண்ணன் தம்பியின் நலனைக் கவனிக்க வேண்டும். தம்பி அண்ணனின் நலனைக் காக்க வேண்டும். இதுவே பலராமகிருஷ்ண அவதாரத் தத்துவம்!

இதற்குச் சான்றாக, ரஷ்ய நாட்டுச் சிறுகதை ஒன்றை இங்கே நினைவு கொள்ளல் நலம் தரும்.

ரஷ்ய நாட்டில் அண்ணன் தம்பியர் இருவர் அன்புடனும் ஒற்றுமையுடனும் வாழ்ந்து வந்தனர். அண்ணனுக்குத் திருமணமாகிக் குழந்தைகளும் பிறந்திருந்தன. ஆனால் தம்பிக்கோ திருமணமே ஆகவில்லை. இருவருக்கும் சொந்தமாகப் பொதுவில் நில புலன்கள் இருந்தன. உரிய காலத்தில் நிலத்தில் அறுவடை நடந்தது. அறுவடை செய்த தானியத்தை அண்ணன் தன் தம்பியின் வீட்டுக்கு

அனுப்பி வைத்தான். "தம்பியின் திருமணத்துக்கான செலவுகட்கு இதனை வைத்துக் கொள்ளச் சொல் லுங்கள்!" என்று சொல்லியனுப் பினான். ஆனால், தம்பியோ அண்ணன் வீட்டுக்கே அத்தானிய மூட்டை களைத் திருப்பி அனுப்பினான். காரணம் கேட்ட ஏவலர்களுக்குத் தம்பி பதில் கூறினான்:

"என் அண்ணனுக்கோ குடும்பம் பெரியது. அண்ணன், அண்ணி, குழந் தைகள் எனப் பலர் உள்ளனர். அவர்கள் குடும்பத்துக்குத் தான் இந்தத் தானியம் பெரிதும் உதவிகர மாக இருக்கும். என் திருமணத் தைப் பின்னர் நடத்திக் கொள்ள லாம். எனவே, என் அண்ணன் வீட்டிலேயே இந்த மூட்டைகளை களை இறக்கி விடுங்கள்!"

இப்படியன்றோ அண்ணன் தம்பி யர் உறவு இருத்தல் வேண்டும்! பல ராமகிருஷ்ணரும் இவ்வாறே ஒருவர் நலனை ஒருவர் நாடியே வாழ்ந்து வந் தனர். எந்த நிலையிலும் பலராமர் கண்ணனுக்கு விஞ்சி நின்றதே இல்லை. தன் தம்பிக்குக் கிடைக்கும் பெருமை யனைத்தும் தனக்குக் கிடைக்கும் பெருமையாகவே கருதலானார். தனக் குள்ள பேராற்றல் முழுவதையும் கிருஷ்ண கைங்கரியத்துக்கே பயன் படுத்திப் பணி புரிந்து வந்தார் பல ராமர்!

பலராமரும் கண்ணனும் இவ்வாறு இணை பிரியாது வாழ்ந்து வந்தனர். அப்போது, ஒரு நாள் பிரலம்பன் என்னும் அசுரன் ஒருவன் தன் மாயை யின் ஆற்றலால் ஆயர் குல ஆட வனைப் போல வடிவமெடுத்து வந் தான். பலராமனை வாகனமாக்கி அவன்மேல் ஏறி விளையாடும் பாவனை யில் பலராமனைக் கொல்லச் சூழ்ச்சி செய்தான். முதலில், பலராமனைத் தான் சுமந்து கொண்டு விளையாட் டைத் தொடங்கலாம் என்று பிரலம் பன் கூறினான். எனவே, பிரலம்பன் முதுகின்மேல் ஏறிப்பலராமர் சென்று கொண்டிருந்தார். ஒரு குறிப்பிட்ட இடம் வரைக்கும் இவ்வாறு செல்ல வேண்டும் என்று முடிவு செய்திருந் தனர். ஆனால், பிரலம்பனோ குறிப் பிட்ட இடத்தையும் தாண்டிச் சென்று கொண்டிருந்தான்.

பிரலம்பன் செய்யும் சூழ்ச்சியைப் பலராமர் குறிப்பால் உணர்ந்து கொண்டார். எனவே, அவனுக்குச் சுமக்க முடியாத பாரமாகத் தன்னைத் தன் ஆற்றலால் மாற்றிக் கொண் டார். திடீரென்று பலராமரின் உடல் கனக்கவே, சுமக்க முடியாதவனாய்ப் பிரலம்பன் தவித்தான். எனவே, தன் உண்மையான அரக்க வடிவத்தை எடுத்துக்கொண்டு திடீரென்று வானை நோக்கிச் செல்ல முற்பட்டான். பிரலம்பன் அரக்கனாக வடிவெடுத் தது கண்டார் பலராமர்! ஓங்கித் தன் கைகளால் அவனை ஒரே அறையாக அறைந்தார். பலராமரின் தாக்கு தலுக்காற்றாத அரக்கனின் தலை பிளந் தது. உடலெங்கும் செந்நீர் பெருகி யது. 'ஓ' எனக் கதறிப் பூமியில் விழுந்து உயிர் துறந்தான் பிரலம் பன்!

இவ்வாறு இளம் பிராயத்திலேயே தன் தெய்வத் தன்மையைப் புலப் படுத்தி நின்றார் பலராமர்! பின்னர், தன் தம்பியோடு கூடி வேதங்களைப் பயில விரும்பினார். அக்காலத்தில் அவந்தி நகரில் சாந்தீபிநி என்னும் பெயருடைய முனிவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் வேதங்களி லும், சாத்திரங்கள் பலவற்றிலும் தேர்ச்சியுற்ற வித்தகராக விளங்கி வந்தார். எனவே, அவந்தி நகர் சென்று சாந்தீபிநி முனிவரைக்கண்டு வணங்கினர் அண்ணன் தம்பியர்! பலராம கிருஷ்ணரின் அழகிலும், அறிவு நலத்திலும் ஈடுபாடு கொண் டார் முனிவர். எனவே, அவர்களுக் குக் கலைகள் பலவற்றையும் அறுபத்து நான்கு நாளுக்குள்ளாகவே கற்கு மாறு போதனைசெய்தார். குருவாகிய சாந்தீபிநி முனிவர் கேட்டுக்கொண்ட வண்ணமே, மாண்டு போன குருவின் மைந்தனை மீளக் கொண்டு வந்து காணிக்கையாகக் கொடுத்துக் களிப் புறச் செய்தனர். பின்னர், மதுரா புரிக்கு இருவரும் எழுந்தருளினர்.

உருக்குமிணியைத் திருமணம் புரிந்து கொள்ளக் கருதிய கண்ண னுக்குப் பலராமர் பக்க பலமாக இருந்து திருமணத்தை இனிதே முடித்து வைத்தார். பாரதப்போரின் பொழுதும், அதன் பின்னரும் நடை பெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளிலும் பலராமர் கண்ணனோடு துணையாக இருந்து வந்தார்.

கண்ணன் வரலாற்றிலிருந்து பல ராமரின் வரலாற்றைத் தனியே பிரித்து எடுக்க முடியாது. கண்ண பிரான் திருவிளையாடல்களைப் பலராமர் திருவிளையாடல்களாகவும், பலராமர் திருவிளையாடல்களைக் கண்ணபிரான் திருவிளையாடல்களாக வும் கருதுவதே மரபாக இருந்து வரு கிறது. எனினும், கண்ணன் பூர்ணாவ தாரன். எனவேதான் கண்ணன் பூசிக்கத் தகுந்தவராக விளங்குகிறார்.

பலராமர் திருமாலின் அம்சம் பொருந்தியவராக இருப்பினும் கண் ணனுக்குமுன் அவர் அடங்கியே காணப்படுகிறார். எனவேதான், பல ராம அவதாரத்தைக் கிருஷ்ணவதா ரம்போல் சிறப்பித்துப் பேசுவதில்லை பரசுராமர், சீதாராமர் பலராமர் ஆகிய மூன்று ராமர்களிலும் சீதா ராமர்மட்டுமேசிறந்து விளங்குகிறார்

எனினும், பலராமாவதாரத்தைப் பற்றிய சிறப்புக்களைப் பரிபாடல் புறநானூறு, பாரதம் முதலான இலக் கியங்கள் பரக்கப் பேசுதலைக் கண்டு மகிழ்ச்சியே யடைகிறோம்.

கார்மேகக் கண்ணனின் சரிதம் உள்ளளவும் பால் நிற வண்ணனின் சரிதமும் உலகில் நிலவி வரும் என் பது ஒருதலை.

பணிவிடையின் சிறப்பு, அண்ணன் தம்பியரின் அன்பான உறவு முதலி வற்றை அழகுற விளக்கும் பரசுரா அவதாரத்தைப் படிப்போர், கேட போர் நலமெல்லாம் பெற்று உலகில் உயர்வது திண்ணம். அடுத்து, ப ராமரின் தம்பி கண்ணபிரான் அ தாரம் பற்றிச் சிந்திப்போமாக!

(தொடரும்

(12-ம் பக்கத் தொடர்ச்சி)

திருமால் திவ்வியப் பிரபந்தக் கண்ணனாகச் சிறப்பிக்கப்படுகிறான். பாலில் தேனும், சர்க்கரையும், கன்னலும் கலந்ததுபோல் இப்பாசுரங்களில் கண்ணன் பக்தியும், பக்திக் கற்பனைகளும், நால்வகை நிலக்காட்சிகளும் பரவி நிற்கும். திவ்வியப் பிரபந்தப் பாடல்களில், பெண்தன்மை எய்தும் தமிழ் நன்னூல் துறை இலக்கண அமைதியுடன் காணப்படும். மற்றும் பாசுரங்களின் போக்கில் அந்தந்தத் தலங்களில் கோயில் கொண்டிருக்கும் பெருமாள் — நாச்சியார் — புஷ்கரிணி—தலம்-தலத்தோர் என்றவகையில் சிறப்பிக்கப்பட்டும் காணப்படும் கற்பனைகள் மிகமிகக் கருத்துச் செறிவுள்ளவைகளாக இருக்கும். இவ்வாழ்வார்களின் பாசுரங்களில் பல அகக் கற்பனைகளாகவும், சில புறக் கற்பனைகளாகவும் இருக்கும். நால்வகை நிலங்களின் வருணனைகளில் இவ்வாறு கற்பனைகளும் இலைமறை காய்கள் போல் சிந்தித்துப் பார்க்கச் சித்தத்துள் காணப்படும். முடிவாக "நாலாயிரமும் அடியோங்கள் வாழ்வே" என்றபடி இப்பிரபந்தங்கள் ஸ்ரீவைணவர்களின் வாழ்வின் வழிக் காட்டியாகும்.

## புறக்கற்பனை - மருத நிலம்

தொல்காப்பிய இலக்கணப் படிக்கு மருத நிலம் என்பது வயலும் வயலைச் சார்ந்த இடங்களாகும். ஈண்டு மருத நிலக்காட்சியில், திருமங்கை ஆழ்வாரின் புறக் கற்பனைக் காட்சியைக் காணலாம். திருமங்கை ஆழ்வார் அருளிச் செய்த - பெரிய திருமொழியில்-திருநறையூர் என்ற - நாச்சியார் கோயில் பதிகத்தில் வரும் புறக் கற்பனையில் ஒரு மருத நிலக்காட்சியை எடுத்துக் காட்டுதும்: எங்கும் பசுமையான வயல் சூழ்ந்த திருநறையூர் தலப் பெயருக்குத் தக்கபடி எங்கும் மலர்த் தேன் மணக்கப் பொறி வண்டுகள் உலாவும் புறக்காட்சி. சலசல என ஒலிக்கும் மதகு நீர்ப்பெருக்கு மாமணி வண்ணன் நறையூர் நின்ற நம்பியின் புகழையும், கலியனின் கன்னித் தமிழின் இனிமையையும் புகழ்ந்து பேசுவதுபோல் இருக்கிறது. ஒரு நாள் மாலை நேரம். அங்கோர் நீர் ததும்பும் குளம். குளத்தின் நீர் வளத்தால் இயற்கைக்கு மாறுக ஓர் [illegible] பசும் தாமரை மலர்களும் செழித்திருக்கின்றன அல்லி மலரும் ஆணும் பெண்ணுமாய் இரு நண்டுகள் மனமொத்த குடும்பம் நடத்துகின்றன. நாளடைவில் "நங்கை" என்ற பெண் நண்டு கருத்தரிக்கிறது. இயற்கையின் போக்கில் மனிதர்களுக்குப் போல் பெண் நண்டிற்கு "மசக்கை" என்ற கர்ப்ப காலத்து ஆசை ஏற்படுகிறது. பகவானுடைய திவ்ய கடாக்ஷம் படரும் க்ஷேத்திரமானதால் நண்டுக்கும் மனிதத் தன்மை பரவிற்றுப் போலும். மனைவிக்குத் தேனில் விருப்பம். உள்ளம் கூடிய குடும்பமானதால் "அலவன்" என்ற ஆண் நண்டிற்கு மனைவியின் எண்ணம் அறியப் பட்டது. அல்லியில் தேன் இருக்காது. அதற்காகக் குளத்தின் மறுபுறம் உள்ள தேன் சொட்டும் தாமரை மலரை நாடி ஆண் நண்டு சென்றது. பகல் முழுவதும் ஆசை வசப்பட்டு தேனை வாயில் எடுத்துக் கொண்டது. இரவு வந்ததே தெரியவில்லை. இரவு வந்ததும் தாமரை மூடிக்கொண்டது. மனைவிக்குத் தேன் தந்த மலரைச் சிதைக்க விருப்பமற்ற ஆண் நண்டு இரவெல்லாம் மலரிலேயே மனைவியை நினைந்து 'ரீங்காரம்' செய்து கொண்டிருந்தது. அல்லி மலரில் உள்ள பெண் நண்டு கணவனைப் பிரிந்து இரவெல்லாம் வேதனைப்பட்டு வாடி இருக்க அதி காலையும் வந்துவிட்டது. ஆண் நண்டு மிகவும் விரைவில் நிலைகுலையக் கண் சிவக்க-உடல் இளைக்க - நடை தளர அல்லி மலரை நாடி, ஆசையால் வேகமாக வருகிறது. அல்லி மலரின் இதழ்களின் இடையாகிய ஜன்னல் வழியே தன் கணவனை நோக்கி மகிழும் பெண் நண்டு - கணவன் அருகே வரவர, அதன் நடத்தையில் ஊடல் கொண்டு ஏங்கியது. காலை நேரமானதால் அல்லி மூடிக் கொண்டது. அதை ஆழ்வார் கற்பனையில் பெண் நண்டு தன் வீட்டின் கதவைச் சினந்து தாளிட்டது என அருளினார்- அப்பாசுரம் பின்வருமாறு:

"பள்ளிக் கமலத்து இடைப்பட்ட படு
வாய் அலவன் முகம் நோக்கி
நள்ளி ஊடும் வயல் சூழ்ந்த நாறை
யூரே."

## புறக்கற்பனை - முல்லை நிலம்

அடுத்து - திருவாய் மொழியில் திருப்புலியூர் பதிகத்தில் புறக் கற்பனையில் வரும் முல்லை நிலக் காட்சியைக் காணலாம்:

திருப்புலியூரைச் சுற்றி எங்கும் அடர்ந்த சோலை-முல்லை நிலம் என்பது சோலையும் சாலையும் கலந்த காட்சி தரும் நிலமன்றோ. அங்கு ஒரு புறம் வெற்றிலைக் கொடிக் கால் தோட்டம். அத்தோட்டத்தில் ஓர் இளம் தளிர்த்த வெற்றிலைக் கொடி. அருகே தளிர்ந்த, வளம் கொண்ட, இளம் பாக்கு மரம். வளர்ந்த வெற்றிலைக் கொடி தானே தாவி அம்மரத்தை அணைத்துத் தழுவுகிறது. இதனை ஆழ்வாரின் அகக் கண் கடல் வண்ணனையும், கடல் மங்கையையும் காண்பது போல் மகிழ்கிறது. அடுத்து நிற்கும் தளதளப்பான வாழை வரிசைகள் கனிந்த வாழை வாழைத்தாருடன் நிற்கின்றன. இதனைக் கண்டார் ஆழ்வார். இந்தக் கடவுள் தம்பதிகளைக் கண்டதும் வாழைஅடி வாழையாக வளரும் இந்த வாழை மரங்கள் இவர்களுக்கு தானே பழுத்தாய் வாழைப் பழங்களின் காணிக்கையைத் தலையில் சுமந்து நிற்கின்றனவோ எனக் கற்பனை செய்கிறார். அருகில் உள்ள தென்னை மரங்கள் இளவரசிக்குத் தோழிகள் போல் "காலாஞ்சி" போன்ற இலை மடலைத் தாங்கி நிற்கின்றன. இன்பத் தென்றல் வீசுகிறது, இன்பக் கீதம் கேட்கிறது. இப்படி ஒரு தெய்வ பக்தியில் காணும் இயற்கை இன்பக் காட்சியை வருணிக்கும் ஆழ்வார் பாசுரம் பின் வருமாறு:

"மெல்இலைச்செல்வ வண் கொடிப்
புல்க, வீங்கு இளம்தாள் கமுகின்
மல்இலைமடல் வாழை ஈன்கனி
சூழ்ந்து மணம் கமழ்ந்து
புல்இலைத் தெங்கின் ஊடு கால்
உலவும் தண் திருப்புலியூர்
மல்அலம் செல்வக் கண்ணன் தாள்
அடைந்தாள் இம்மடவராலே."

## கற்பனைக்குள் - குறிஞ்சி நிலம்

கவிகளின் கற்பனைகளில் சில கற்பனைகள் இல்பொருள் உவமையாகவும், கற்பனைக்குள் கற்பனையாகவும் அமைவதுண்டு. அத்தகைய கற்பனைக்குள் கற்பனையான குறிஞ்சி நிலக் காட்சி ஒன்று ஈண்டு காணலாம். ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையில் "மாரிமலை" என்ற பாடல். மலை

நாட்டுத் திருப்பதியில் ஓர் மலைக் குகை. மழைக் காலம் சென்றது. இளவேனிற்காலம் தொடங்கிற்று. குகைக்குள் ஓர் ஆண் சிங்கம் தன் இளம் காதலியுடன் படுத்திருந்து, காலைக் கண் விழித்தது. அது சாதாரண சிங்கமன்று. சிறப்பான "பஞ்சானன்" என்ற சிங்கம்.

தீ போன்ற கண்ணால் பக்கம் நோக்கியது. புலால் வாடை வீசும் தனது அடர்ந்த பிடரி மயிற்றை சிலிர்த்தது. உடலை முறித்துக் கொண்டு நெட்டி எடுத்து, மூரி நிமிர்ந்து, கர்ஜித்துக் கொண்டு உள்ளிருந்தே வெளியில் ஒரு தாவல் செய்தது. சிறு கற்பாறையில் அமர்ந்தது. அங்குமிங்கும் நோக்கிற்று. இந்த அழகும், மிடுக்கும், பெருந்தன்மையும் ஆண்டாளின் கண்களைக் கவர்ந்தன. அன்று மதுரை நகரில் சிங்கக் குட்டி போல் பாய்ந்து கம்ஸனின் கொட்டத்தை அடக்கி, அருகே அரியாஸனத்தில் அமர்ந்து எல்லோரையும் அன்பும் மிடுக்கும் கொண்ட திருக்கண்களுடன் நோக்கிய யசோதையின் இளம் சிங்கத்தை நினைவூட்டியது. உடனே பக்தனிடம் பசு போல் பழகும் இச்சிங்கத்தின் அருகே தைரியத்துடன் சென்று ஆண்டாள் என்ற அருள் சிங்கம் தாம் வந்த காரியத்தை விண்ணப்பித்துக் கொண்டது. அப்பாடலே,

" மாரிமலை முழைஞ்சில் மன்னிக்கிடந்
துறங்கும், சீரிய சிங்கம்
அறிவுற்றுத் தீ விழித்து........."

என்ற திருப்பாவைப் பாசுரமாகும்.

## அகக்கற்பனை-நெய்தல்நிலம்

கடலும், கடலைச்சார்ந்த பகுதியும் நெய்தல் நிலமாகும். நெய்தல் நிலத்தில் கண்ட அகக் கற்பனையில் ஒரு காட்சியைக் காணலாம். நம்மாழ்வாரின் அருளச் செயலில் திருவிருத்தம் என்ற பகுதி. அடங்காத பகவத் ப்ரேமை வெள்ளமிடவே பெண் தன்மை எய்திய பராங்குச நாயகியின் தெய்வீகக் கற்பனை பீறிட்டது. உடலைப் போல் உள்ளமும் கறுத்த திருமால் ஒரு கொடியவராகி விட்டார் இந்தத் தலைவிக்கு. பாற்கடலுள் பள்ளி கொண்ட அண்ணல் திருமகளுடன் கூடிக்குலாவுகிறார். தனித்த இடம், பாற்கடல் அலைகள் அசைய, பாம்பணை மேல் மெத்தென்றிருக்கக் குளிர்ச்சி, வெளுப்பு, மணம், வழவழப்பு. அசைவு இவைகளுடன் கூடிய இன்பவேளை. கேட்க வேண்டுமா. திருமகள் தன் செந்தாமரைக்கைகளால் எம்பெருமானைக் காதல் சுவையுடன் திருக்கண்ணிட்டு திருவடி வருடிக்கொண்டிருக்கிறாள். இதைக் கண்ணுற்றாள் நிலமங்கை என்ற மற்றோர் தேவி. உரிமை பெற்றவள் அல்லவா. தானருகே இருக்க மற்றோர் மங்கையுடன் தன் கண் எதிரே இத்தனை இன்ப நுகர்ச்சியா. பெண்ணல்லவா! பொறுமை விஞ்சுகிறது. வருந்துகிறாள். அவளால் ஆவது ஒன்றில்லை என்ற எண்ணம் பிறக்கிறது. அழுகிறாள். இதற்குள் கடல் அரசன் மகிழ்ச்சி ஆரவாரத்துடன் தன் மகளான திருமகளை அலைகளாகிற கைகளால் ஆனந்த பாஷ்பம் வழிய ஏந்திக்கொண்டு திருமாலிடம் சேர்க்க, திருமகளும் மகிழ்ச்சி அடைந்து, திருமாலின் படுக்கையிலே அருகே அமர்கிறாள். நான் ஏங்கி நிற்க இத்திருமகள் என மற்றோர் பெண்ணுடன் திருமால் குலாவுகிறாரே இது தகுமா? இது எல்லாம்வல்ல பொதுத் தெய்வமான இவருக்குப் பொருந்துமா? என விண்மீது சென்று முகிலாய் மாறி, ஊரார் கேட்க உரக்க இடித்துக் கண்ணீர் விட்டழவும், அந்நிலமங்கையின் கண்ணீர் போன்ற மழை அருவி அவனது திருமுலைத் தடங்களாகிற மலைகளின் மேலிருந்து ஆறுபோல் பெருகி வருகிறது காணீர் என்று தமது ஆற்றாமை யாகிற பகவத் ப்ரேமையை வெளியிடும் வாயிலாகப் பராங்குச நாயகி என்ற நம்மாழ்வார் ஓர் பாசுரம் இடுகிறார்.

" அழைக்கும் கருங்கடல் வெண்திரைக்
கைக் கொண்டு போய் அலர்வாய்,
மழைக்கண்மடந்தை அரவணை ஏற,
மண்மாதர், விண்வாய்
அழைத்துப் புலம்பி, முலைமலைமேல்
நின்றும் ஆறுகளாய்
மழைக் கண்ணநீர், திருமால் கொடி
யானென்று வார்கின்றதே" என்று.

இவ்வாறு பல நிலக் காட்சிகளை ஆங்காங்கு அக இலக்கணம் குன்றாமல் பல காட்சிகளை ஆழ்வார்கள் அமைத்து அருளிய தமிழ்ப் பாசுரங்களில் பக்திச் சுவையும், கருத்துச் செறிவும், வேதாந்த அமைதியும், தமிழ் நடையும் படிப்பவர்களின் மனதில் பெரும் திருமால் மயக்கத்தைத் தானே உண்டு பண்ணும். ஆகவே தான் அப்பரம்பொருளே ஆழ்வார்களின் அமுதத் தமிழுக்காகத் தன் தன் இரு செவியையும் மடுத்து பட்டினி கிடந்தவனுக்குப் பால் அன்னத்தில் வேட்கை மிஞ்சுவது போல் இன்புறக்கேட்டு என்றும் இனிந்தே இருப்பார். இத்தமிழ்ப் பிரபந்தங்களை இசைத்துப் பாடுவார் முன்பே, தானே முகம் காட்டி அன்று ஆயர் பாடியில் ஒரு கவள வெண்ணைக்குக் குடம் எடுத்துக் கூட்டியது போல், ஆடிக் காட்டுவன் ஆதிமுதல்வன் என்பது பெரியோர் காட்டிய உண்மை. ✽

---

(10-ம் பக்கத் தொடர்ச்சி)

திருப்புகழ் பாடிய அருணகிரிநாதருக்கும், திருமூலநாதருக்கும் ஒத்த இயல்புகள் பல உள்ளன. மிகப் பெருமையும் ஆழ்ந்த கருத்துக்களும் கொண்டுள்ள திருமூலரின் திருமந்திரத்தின் பெருமையை உலக மக்கள் எல்லாம் அறிய திருமந்திர நூல்களை தந்திரமாக விளக்கத்துடன் இலவச வெளியீடாக வெளியிட்டும் திருமந்திர மாநாட்டின் மூலம் பாமரர்கள் முதல் அனைவரும் அறிய பேரறிஞர்களைக் கொண்டுவிளக்கம் செய்யவும் செய்து தமிழ் மணம் பரப்பி வரும் திருவாவடுதுறை ஆதினத்துத் தலைவர் ஸ்ரீலஸ்ரீ அம்பல வாண தேசிய பரமாச்சார்ய சுவாமிகளின் பெரும் சமய சமுதாய தொண்டின் பயனை மீண்டும் பல பதிப்புக்கள் வெளி வருவதை வரவேற்க வேண்டியது. இத்திருமந்திரம் ஆங்கில நூலாகவும் வெளியீடு செய்து அயல் நாட்டினரும் பயன் படுத்தி வருவது குறிப்பிடத்தக்கது. இத்திருமூலத் திருவாவடுதுறை ஸ்ரீ மாசிலாமணி ஈஸ்வரர் திருக் கோயிலில் தனிச் சன்னதி அமைத்து பொது மக்கள் இன்றும் வழிபடுகிறார்கள்.



# இராவணன் கொடியவனே

திரு. எம். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
ஆசிரியர், ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்ஸனம்;
திருச்சி-17.

ஜுலை'81 ஸப்தகிரியில் 'தேவாரத்துள் இராமாயணம்' என்னும் கட்டுரையில் ''இராவணன் கொடியவனே என்று எண்ணலாகாது'' என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது. திருநாவுக்கரசர் 300பதிகங்களிலும், திருஞான சம்பந்தர் 400 இடங்களிலும் இராவணன் பெருமையைப் பாடியிருப்பது இதற்கு ஆதாரமாகக் காட்டப்பட்டுள்ளது. இக்கருத்து சரியானதா என்பதை இங்கு ஆராய்வோம்.

இராவணன் சிவ பக்தனுகையால் நாயன்மார்கள் அவன் பெருமையை நூற்றுக்கணக்கான பாடல்களில் பாடியிருக்கலாம். ஆனுல் வால்மீகி ராமாயணத்தையும், கம்பராமாயணத்தையும், ஆழ்வார்களுடைய பாசுரங்களையும், காளிதாசன் முதலான ராம சரிதம் பாடிய நூற்றுக்கணக்கான கவிகளின் நூல்களையும் நடுநிலை நின்று ஆராய்ந்தால் 'இராவணன் கொடியவனே' என்பதை எவரும் மறுக்க இயலாது.

வீர்யம், தைர்யம், பராக்கிரமம், ஐச்வர்யம், பலம், ரூபம், காந்தி, இசையறிவு, வேதாத்யயனம், சிவ பக்தி முதலான பல பெருமைகள் இராவணனுக்கு உண்டு என்பதை எவரும் மறுப்பதில்லை. இவனைக் கண்டவுடன் அநுமன் இவனுடைய இப்பெருமைகளையெல்லாம் கண்டு வியந்து ''இவ்வளவு பெருமைகளையுடைய இவன் அறத்தை மீறியவனுயிருக்கிறுனே'' என்று வருந்தியதாக வால்மீகி ஸுந்தரகாண்டத்தில் (49–18) கூறியிருக்கிறுர். பலவிடங்களில் இவன் செய்த அதர்மச் செயல்களை விரிவாக விளக்கியிருக்கிறுர். தேவர்கள் இராவணனைப் பற்றிப் பிரமனிடம் முறையிடும் போது,

'' உத்வே ஜயதிலோகாம் ஸ்தீரீந்
உச்சரிதாந் த்வேஷ்டி துர்மதி : ''
பாலகாண்டம் 5–8

இராவணன் மூவுலகங்களையும் அருவருப்படையச் செய்கிறுன். தீய அறிவுடையவனுகையாலே உயர்ந்தவர்களிடமெல்லாம் த்வேஷம்கொள்கிறுன் என்று தொடங்கி, இராவணன் பல அடாத செயல்களைச் செய்கிறுன் என்று விரிவாக விளக்கியிருக்கிறுர்.

'' அஸ்ய க்ரூரை: ந்ருசம்ஸை:
ச கர்மபிர்லோக குத்ஸிதை :।
தேநபிப்யதி கல்வஸ்மால்லோகா:
ஸாமரதாநவா :॥
(ஸுந்தரகாண்டம் 49–19)

இவ்இராவணனுடைய கொடியவையாய், பயங்கரமானவையாய், உயர்ந்தோர் அனைவராலும் இகழப்படுபவையான காரியங்களால் தேவர்கள், தானவர்களை உள்ளிட்ட எல்லா உலகங்களும் இவனைக் கண்டு பயப்படுகின்றன என்று அநுமன் வாயிலாகக் கூறியிருக்கிறுர். இப்படி வால்மீகி ராமாயணத்தில் நூற்றுக்கணக்கான இடங்கள் உண்டு.

கம்பராமாயணத்திலும் திருவவதாரப்படலத்தில்,

'' ஐயிருதலையினேன் அநுசராதியாம்
மெய்வலி அரக்கரால்
விண்ணும் மண்ணுமே
செய்தவம் இழந்தன '' 18

'' அரக்கர் என்றுளார் பொங்கு
மூவுலகையும் புடைத்து அழித்தனர்''
19

என்று திருமாலை நோக்கி தேவர்கள் இராவணனின் கொடுமைகளை முறையிட்டதாகக் கம்ப நாட்டாழ்வான் காட்டுகிறுன். இத்தகைய இடங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன பல பாஷைகளில் ராமசரிதம் பாடிய காளிதாசன் முதலான பற்பல கவிகளின்காவியங்களிலும் நூற்றுக்கணக்கான இடங்களில் இராவணனின் அடாத செயல்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

ஆழ்வார்களும் நூற்றுக்கணக்கான பாசுரங்களில் 'இராவணன் கொடியவர்களில் முன்னிற்பவன்' என்று பாடியிருக்கிறுர்கள். ''கொடியான் இலங்கை செற்றேனே என்னும்'' [திருவாய்மொழி 5–6–9] என்றுர் நம்மாழ்வார். ''கொடுமையில் கடுவிசையரக்கன்'' [பெரிய திருமொழி 5–7–7] ''முன்பொலா இராவணன்'' [திருக்குறுந்தாண்டகம் 15] என்றுர் திருமங்கையாழ்வார். ''பொல்லா அரக்கன்'' [திருப்பாவை 13] என்றுள் ஆண்டாள். இப்படிப் பலவிடங்கள் உண்டு.

இராவணன் பல பெருமைகள் பெற்றவன் என்பது வேறு விஷயம். ஆயினும் கணக்கிலடங்காத பல கொடுஞ்செயல்களைப் புரிந்தவன். அவற்றிற்கெல்லாம் சிகரமாக ஜகன் மாதாவான சீதாபிராட்டியைச்சிறையெடுத்தவன் என்பதும் அனைவரும் இசைந்தது. இவை யிரண்டையும் ஒன்றுக்கிக் குழப்புகிறுர் கட்டுரையாளர்.

எனது நண்பர் ஒருவர் கூறிய உண்மை நிகழ்ச்சியொன்று இங்கு அனைவராலும் அறியத்தக்கது. ஓர் ஊரில் இராவண பக்தரான ஒரு நீதிபதியிருந்தார். அவர் அடிக்கடி நீதிமன்றத்தில் இராவணன் புகழ் பாடி வந்தார். அவர் நீதிபதியாயிருப்பதால் வழக்கறிஞர்கள் அவர் கூறுவதைப் பொறுத்துக் கொண்டிருந்தனர். ஒரு நாள் நீதிபதியின் இராவண பஜனை எல்லை மீறிப் போயிற்று. இதைப் பொறுக்கமுடியாத ஒரு தைரியசாலியான வழக்கறிஞர் "Your Honour should wait till your Houour's wife is abducted" [மேன்மை தங்கிய நீதிபதியவர்கள் தமது மனைவியை ஒருவன் இழுத்துக் கொண்டு போவதுவரையில் பொறுத்திருந்துவிட்டு அதற்குப்பின் இராவணன் புகழ்பாடுவது நல்லது] என்று கூறினுராம். அதற்குப் பின் நீதிபதி இராவணன் புகழ் பாடுவதை நிறுத்திக்கொண்டு விட்டார் என்று கேள்வி.

நம் நாட்டில் இராமராஜ்யம் ஏற்படவேண்டுமென்றே எவரும் விரும்புவர். இராவண ராஜ்யத்தை எவரும் விரும்பமாட்டார் என்பது வெளிப்படை.



# உங்களுடன் ஒரு நிமிடம்....

ஒரு பத்திரிகையின் வெற்றி மற்றும் அதன் பெருமை, அப்பத்திரிகையின் விற்பனை எண்ணிக்கை, அதில் இடம்பெறும் விளம்பரங்களின் எண்ணிக்கை ஆகியவற்றைக் கொண்டு கணிக்கப்படும் என்று கருதலாம். ஆனால் இந்தக் கண்ணோட்டத்தில் 'ஸப்தகிரி'யை எண்ணிப் பார்ப்பதை விட, அதன் இலட்சியம் என்ன என்று பார்ப்பதே நன்மை தரும். ஆம், மங்கை வாழ் மார்பனின் அருளாலும் வாசகர்களின் அன்பினாலும் ஸப்தகிரி இன்றுவரை தளிர்நடை போட்டு வருகின்றது. ஐந்து மொழிகள் உள்ளிட்டு, நாற்பதாயிரம் பிரதிகள் விற்பனை எண்ணிக்கை கொண்டு விளங்கி, அவ்வெண்ணிக்கை சீராக மேலும் உயர்ந்து கொண்டு வருவது, மக்களிடையே ஆன்மீக தாகம் பெருகி வருவதைக் கூறாமல் கூறுகின்றது. இதைத்தான் ஸப்தகிரியும் நாடுகின்றது. ஏனெனின் அதன் இலட்சியமும் அதுதானே. ஆகவேதான் பத்திரிகை நஷ்டத்தில் இருந்தாலும், தி. தி. தேவஸ்தான மேலாண்மையின் பொருள் உதவியுடன் வளர்ந்து வருகின்றது. ஆம், ஸப்தகிரியின் ஒரு பிரதியின் ஆக்க விலை ரூ. 3 ஆக இருந்த போதிலும், அது 50 காசுக்கு விற்கப்பட்டு வருகின்றது. கூறப்புகின், பத்திரிகை, ஏறக்குறைய இலவசமாகவே வழங்கப்படுகிறது என்றே கருத வேண்டும். ஸப்தகிரியை ஒரு வியாபார கண்ணோட்டத்தோடு பார்க்காவிடினும், அது முடிந்த வரைதன் சொந்தக் கால்களிலேயே நின்றால் அது, அதன் தரத்தினை மட்டுமின்றி, இன்று பெருகி வரும் ஆன்மிகப் பசியின் ஆழத்தினை எடுத்துக் காட்டும் ஒரு அளவு கோலாக அமையும். இதனை மனதிற் கொண்டு, ஸப்தகிரியும் ஒரு தனித் தன்மையுடன் விளங்கிட, அடுத்த இதழ் முதற் கொண்டு பத்திரிகையில், பிரச்சனைக் குள்ளாகாத வகையில் வெளியிடப்படும் விளம்பரங்களின் கட்டணங்களை உயர்த்தியும், தனிப்பிரதியின் விலையினை ரூ. 1/- ஆக உயர்த்தவும் தி. தி. தே. மேலாண்மை முடிவு செய்துள்ளது. அப்படியும் பத்திரிகையின் ஒரு தனிப்பிரதி ரூ. 2/- நஷ்டத்திற்கே விற்கப்பட்டு வரும். அதே சமயத்து அடுத்த இதழ் முதற்கொண்டு தமிழ், தெலுங்கு ஸப்தகிரி அதிக பக்கங்களுடன் கொண்டு விளங்கும். பத்திரிகையின் பல்வேறு வயதுப் பிரிவினரைக் கொண்ட வாசகர்கள் பயனுறும் வகையில், பல பகுதிகளை கொண்டு விளங்கவே பக்கங்கள் உயர்த்தப்பட்டுள்ளன. ஆகவே இப்பக்கங்களின் ஏற்றம், விலை மாற்றத்தினை எந்த வகையிலும் பாதிக்காது மட்டுமன்றி, தேவஸ்தான மேலாண்மை மீண்டும் ஒருக்கால் பத்திரிகை விலையை உயர்த்த வேண்டிவரின், அம்முடிவு நியாயமானதே என்ற உணர்வினை வாசகர்களிடையே மேலோங்கச் செய்யும் என்றே கருதுகிறோம். ஆகவே இது காறும் ஸப்தகிரிக்கு கிடைத்து வரும் இறைவனின் அருளும், வாசக அன்பர்களின் ஒத்துழைப்பும் தொடர்ந்து கிடைக்கும் என்றே நம்புகிறோம்.

நன்றி

ஆசிரியர்.



அண்மையில் திருச்சானூர் ஸ்ரீ பத்மாவதி அம்மையார் கோயிலில் நடைப்பெற்ற கோடி குங்கும அர்ச்சனைக்கு இந்திய ஜனாதிபதி திரு. என். சஞ்சீவரெட்டி அவர்கள் வருகை புரிந்தபோது.

# ராசி பலன்

(1-9-81 முதல் 30-9-81 வரை)

Dr. டி. அர்க்கசோமயாஜி, M.A., Phd.
திருப்பதி.

## மேஷம்

(அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

பண வரவும், வெற்றியும் அமையும். வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறுவதால் உடல்நலம் கெடல், தீய நட்புறவும் ஏற்படலாம். 20-ம் தேதிக்குப் பிறகு கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல். 17-ம் தேதிக்குப் பிறகு உடல்நலமேன்மை, உற்றார் உறவினருடன் பிரிவு ஏற்படுவதாலும், நட்பு முறிவு ஏற்படுவதாலும் மனயமைதி யிழத்தல். பெண்கள் காரணமாகத் துன்பத்திற்குள்ளாக நேரிடலாம். எனினும் இவ் ராசிக்காரர்கள், பண வரவாலும், வெற்றிகள் அமைவதாலும் மகிழ்ச்சியாகவே இருப்பர்.

நல்ல நாட்கள்

அசுவனி: 1, 3, 11, 13, 18, 21, 28.

பரணி: 2, 4, 12, 17, 19, 20-ம் தேதி பிற்பகல், 22.

கார்த்திகை (1 பாதம்): 1, 3, 11, 13, 17, 20, 21, 28.

## விருஷபம்

(கிருத்திகை 2-ம் பாதம் முதல், ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் முடிய)

பெருமளவு தவறான வழியில் பண வரவு, தன் பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல். 20-ம் தேதி வரை மனைவி அல்லது புதல்வருடன் கருத்து வேறுபாடுகள் கொளல். பின்னர் முயற்சிகளில் வெற்றியடைதல். சிறிதளவு உடல் நலம் கெடல். முதல் வாரத்தின்போது விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல். மொத்தத்தில் இம்மாதம் எந்தவிதமான குறிப்பிடும்படியான நிகழ்ச்சிகள் இன்றி கடந்துவிடும்.

நல்ல நாட்கள்

கார்த்திகை: (2, 3, 4, பாதங்கள்), 3, 6, 13, 15, 20, 23, 28, 30.

ரோகிணி: 4, 12, 14, 16, 22, 30.

மிருக சீர்ஷம்: (1, 2 பாதங்கள்) 3, 5, 13, 15, 19, 23, 30.

## மிதுனம்

(மிருக சீரிஷம் 3-ம் பாதம் முதல், திருவாதிரை, புனர் பூசம் 3-ம் பாதம் முடிய)

புதிய நண்பர்கள், விருந்தினர் வருகை, பெரியோர்களது பாராட்டுதல்களுக்குள்ளாதல். அலுவலகக் கவலைகள் அல்லது சுற்றத்தார் மூலம் கவலைக்குள்ளாதல். அதிக செலவினங்கள் அல்லது அதிக பண நஷ்டம், உற்றார் உறவினருடன் பிரிவு. கடைசி வாரத்தின்போது மனைவி அல்லது புதல்வருடன் கருத்து வேறுபாடு கொளல். இவ்ராசிக்காரர்களுக்கு இம்மாதம் அவ்வளவாக மகிழ்ச்சிகரமாக அமையாது.

நல்ல நாட்கள்

மிருக் சீரிஷம் (3, 4 பாதங்கள்) 5, 8, 15, 17, 27.

திருவாதிரை; 9, 16, 22, 26;

புனர்வசு (1, 2, 3 பாதங்கள்) 5, 8, 15, 17, 21, 25.

## கடகம்

(புனர் பூசம் 4-ம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

புதிய நட்புறவுகள் ஏற்படினும், 20-ம் தேதி வரை தீய நடவடிக்கைகளில் பங்கேற்க வாய்ப்புண்டு. பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள். 17-ம் தேதி வரை ஏமாறுவதற்குரிய வாய்ப்புண்டு மற்றும் கண் சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதியுற நேரிடலாம். 17-ம் தேதிக்குப் பிறகு நாட்கள் நன்றாக அமையும்.

நல்ல நாட்கள்

புனர்வசு: (4-ம் பாதம்) 1, 9, 11, 19-ம் தேதி பிற்பகல் 20-ம் தேதி முற்பகல், 28.

ஆயில்யம்: 2, 8, 10, 17, 19, 20-ம் தேதி பிற்பகல் 23, 27, 29.

## ஸிம்மம்

(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

வரவுக்கு மீறிய செலவுகள். 17-ம் தேதி வரை பிரயாணம் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட தொந்தரவுகளினால் அவதியுறல். கூடா நட்பு ஏற்பட வாய்ப்பு, இகழ்ச்சிக்குள்ளாதல், புதிய ஆடை ஆபரணங்கள். மொத்தத்தில் இவ்ராசிகாரர்களுக்கு இம்மாதம் அவ்வளவு மகிழ்ச்சியாக அமையாது.

நல்ல நாட்கள்

மகம்: 3, 11, 13, 20-ம் தேதி முற்பகல், 21-ம் தேதி பிற்பகல், 26.

பூரம்: 2-ம் தேதி முற்பகல் 4, 12, 20-ம் தேதி முற்பகல், 22, 25.

உத்திரம் (1 பாதம்): 3, 8, 11, 13, 19-ம் பிற்பகல், 20-ம் தேதி முற்பகல், 21-ம் தேதி பிற்பகல், 26.

## கன்னி

(உத்திரம் 2-ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய)

பண வரவாயினும், தேவையற்ற செலவினங்கள். பிரயாணம் அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு. எனினும் கேளிக்கைகளில் ஈடுபடல். முதல் வாரத்திற்குப் பிறகு நாட்கள் நன்றாக அமையும். 17-ம் தேதிக்குப் பிறகு பிரயாணம் அல்லது வயிற்று நோயினால் அவதியுறல்.

நல்ல நாட்கள்

உத்திரம் (2, 3, 4 பாதங்கள்) 1, 5, 6-ம் தேதி முற்பகல், 13, 15, 21, 23, 28.

அஸ்தம்: 2, 6, 12, 16, 20-ம் தேதி பிற்பகல், 22, 29.

சித்திரை (1, 2, பாதங்கள்): 1, 5, 13, 21, 23, 28.

## துலா

(சித்திரை 3-ம் பாதம் முதல், ஸ்வாதி, விசாகம் 3-ம் பாதம் முடிய)

அவ்வப்போது பிரயாணம், கருத்து வேறுபாடுகள், 17-ம் தேதி வரை நாட்கள் நன்றாக அமையும். பண வரவு, புதிய ஆடை ஆபரணங்கள், கேளிக்கைகளில் ஈடுபடல். கூடா நட்பினையும் அதனாற்றான் வரும் பண நஷ்டத்தினையும் பற்றி ஒருவர் முன் அறிதல் நலம் பயக்கும். மொத்தத்தில் இம்மாதம் எவ்வித முக்கியத்துவம் இன்றி கடந்து விடும்.

நல்ல நாட்கள்

சித்திரை (3, 4 பாதங்கள்) 3, 8, 15, 17, 23, 27, 28, 30-ம் தேதி பிற்பகல்.

ஸ்வாதி: 4, 9, 14, 16, 22, 26, 28.

விசாகம் (1, 2, 3 பாதங்கள்) 2, 8, 15, 17, 23, 25, 30.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

பணவரவு, நல்ல நண்பர்கள், 10-ம் தேதி வரை கேளிக்கைகளில் ஈடுபடல், பின்னர் சிறிதளவு கருத்து வேறுபாடுகள். தீய நடவடிக்கைகளில் ஈடுபடல், முயற்சிகளில் வெற்றி.

நல்ல நாட்கள்

விசாகம் (4-பாதம்) 2,5,16,17, 20-ம் தேதி பிற்பகல், 23,25,27,29.

அனுஷம்: 1,11,16,19,26,28.

கேட்டை: 2,5,17,20-ம் தேதி பிற்பகல், 25,27.

## தனுசு

(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய)

பணவரவாயினும், அதிக செலவினங்கள், கருத்து வேறுபாடுகள், மதிப்புக்குறைதல், 7-ம் தேதிக்குப் பிறகு நல்ல நட்புறவுகள். உடம்பில் காயம் ஏற்பட வாய்ப்புண்டு. ஆகவே இம்மாதம் அவ்வளவாக மகிழ்ச்சி தரும் படியாக விளங்காது.

நல்ல நாட்கள்

மூலம்: 1,3,9,13,19-ம் தேதி முற்பகல் 21, 28.

உத்திராடம் (1 பாதம்) 1,3,13, 19-ம் தேதி பிற்பகல், 20-ம் தேதி முற்பகல், 21-ம் தேதி பிற்பகல், 28.

## மகரம்

(உத்திராடம் 2-ம் பாதம் முதல் திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் முடிய)

பணவரவாயினும் தீய நடவடிக்கைகளில் பங்கேற்றல். மனைவியுடன் கருத்து வேறுபாடு அல்லது, கண் அல்லது வயிறு சம்பந்தப்பட்ட நோயினால் அவதியுறல். 20-ம் தேதிக்குப் பிறகு நாட்கள் நன்றாக அமையும். வெளியுலக கருத்து வேறுபாடுகளுக்குள்ளாதல்.

நல்ல நாட்கள்

உத்திராடம் (2,3,4 பாதங்கள்) 3,5,11,15,21,25.

திருவோணம்: 4, 10, 16, 20-ம் தேதி பிற்பகல், 22,25.

அவிட்டம் (1,2 பாதங்கள்) 3,5, 11,15,23,28.

## கும்பம்

(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதையம், பூரட்டாதி 3-ம் பாதம் முடிய)

பிரயாணம் அல்லது உற்றார் உறவினருடன் பிரிவு. பணவரவு, வெற்றி புதிய ஆடை ஆபரணங்கள், கேளிக்கைகளில் ஈடுபடல். 7-ம் தேதிக்குப் பிறகு சத்காரியங்களில் ஈடுபடல், சிறிதளவு உடல் நலம் கெடல் அல்லது மனைவிக்கு மனமகிழ்ச்சியின்மை, மொத்தத்தில் இம்மாதம் நன்றாகவே அமையும்.

நல்ல நாட்கள்

அவிட்டம் (1,2,3 பாதங்கள்); 5, 8,13,17,23,27-ம் தேதி முற்பகல்.

சதையம்: 9,14,16,22,26.

பூரட்டாதி (1,2,3 பாதங்கள்) 5, 8,13,17,23,25.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

பிரயாணம், கேளிக்கைகளில் ஈடுபடல், 20-ம் தேதி வரை கருத்து வேறுபாடுகள். முதல் வாரத்தின் போது பெண்கள் மூலம் தொல்லைக்குள்ளாதல். பின்னர் புதிய ஆடை ஆபரணங்கள். பிள்ளைகள் அல்லது புதல்வியர் காரணமாகக் கவலைக்குள்ளாதல். 17-ம் தேதி முன்பு எடுக்கப்படும் முயற்சிகளில் வெற்றி படையப் பெறல்.

நல்ல நாட்கள்

பூரட்டாதி (4-பாதம்) 2,10,12, 15,20-ம் தேதி பிற்பகல், 25, 27-ம் தேதி பிற்பகல், 29.

உத்திரட்டாதி: 1,11,19-ம் தேதி பிற்பகல், 20-ம் தேதி முற்பகல் 26, 28.

ரேவதி: 2,10 12,15,20-ம் தேதி பிற்பகல், 25,27,29. ★

---

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

எல்லார்க்கும் பொதுவானவன்

இந்தியாவில் தோன்றியுள்ள மதங்கள் அனைத்துக்கும் பொதுவாய் எழுந்தருளியிருக்கும் கடவுள் கணபதி. இந்து மதத்திலன்றி புத்த மதத்திலும் கணபதிக்கு இடமுண்டு. ஜைனர்களும் விநாயகப் பெருமானை விரும்பி வழிபடுகின்றனர். வைதிக மதமான வைஷ்ணவத்திலும் இவருக்கு இடமிருக்கிறது.

வேற்றுநாடுகளில் விநாயகப் பெருமான்

ஆப்கானிஸ்தான், நேபாளம், திபெத்து, இலங்கை, பர்மா, ஜப்பான், ஜாவா, இத்தாலி, அமெரிக்கா முதலிய வேற்று நாடுகளில் கூட விநாயகர் வழிபாடு பெரிதும் பரவியிருந்ததாக கல்வெட்டு மற்றும் சில சான்றுகள் நமக்குத் தெரிவிக்கின்றன.

இதனை தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களும் அவ்வப்போது அறிவிக்கின்றனர். இவ்விஷயம் யாவும் உள்ளபடியே உணர வேண்டியதவஸ்யமாகிறது.

"கணபதி தானைக்கருத்திடை வைத்தால் அகக்கண் திறக்கும்; ஆண்மை பெறும்; அக்னி தோன்றும். வெம்பகையதனையும் துச்சம் என்றெண்ணும் அச்சம் தீரும் அமுதம் விளையும் அமரத்தன்மை பெற இஃது உணர்வீரே". இது மஹாகவி பாரதி தந்த குரல்.

தொன்று தொட்டு இருந்துவரும் கணபதி பக்தியை மக்கள் கடைபிடித்து மேலான கீர்த்தி பெற வேண்டி இக்கட்டுரை சமர்ப்பிக்கப் பட்டிருக்கிறது. அவ்வருட் சக்தியை பெரியோர் போற்றிய வழியிலே போற்ற வேண்டியது நம் கடமையாகும்.



---

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER. T. T. D. PRESS, TIRUPATI-517501.

# ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

| உத்ஸவ கட்டணங்கள் | | | ஸேவைகள் | | |
|---|---|---|---|---|---|
| வஸந்தோத்ஸவம் | ரூ. | 2500/- | அமந்த்ரணோத்ஸவம் | ரூ. | 200/- |
| பிரம்மோத்ஸவம் | ரூ. | 750/- | பூராபிஷேகம் | ரூ. | 500/- |
| கல்யாணோத்ஸவம் | ரூ. | 1500/- | ஸகஸ்ரகலஸாபிஷேகம் | ரூ. | 2500/- |
| *ஊஞ்சல் சேவை | ரூ. | 1500/- | திருப்பாவாடை | ரூ. | 5000/- |
| *தெப்போத்ஸவம் | ரூ. | 2500/- | கோயிலாழ்வார் திருமஞ்சனம் | ரூ. | 1745/- |
| | | | ஸகஸ்ர தீபாலங்கார சேவை | ரூ. | 2000/- |

நித்ய சேவைகள் (ஆண்டொன்றுக்கு)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நித்ய கற்பூர ஹாரத்தி | ரூ. | 150/- | நிரந்தர கற்பூர ஹாரத்தி | ரூ. | 3000/- |
| நித்ய நவநீத ஹாரத்தி | ரூ. | 400/- | நிரந்தர நவநீத ஹாரத்தி | ரூ. | 8000/- |
| நித்ய அர்ச்சனை | ரூ. | 200/- | நிரந்தர நித்ய அர்ச்சனை | ரூ. | 4000/- |

மேற்படி ஆர்ஜித ஸேவைகளுக்குரிய குறிப்பிட்டத்தொகைக்கான D. D. ஒன்றினை 'The Executive Officer, T. T. D. Tirupati' எனும் பெயரில், எந்த வங்கி மூலமாகவாவது பெற்று, அதனை தேவையான தகவல்களுடன் (ஆங்கிலத்தில்) The Peishkar, T. T. D. Tirumala எனும் முகவரிக்கு 15 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும்.

*இச்சேவைகளை செய்பவர்களுக்கு 5 கி. எடையுள்ள தங்கப்பதக்கம் வழங்கப்படும்.

# தங்கு வசதி விவரங்கள்

திருமலையிலும், திருப்பதியிலும் தி. தி. தேவஸ்தானத்தாரின் இலவச தங்கு வசதிகள் தவிர்த்து, குறைந்த வாடகை கட்டணங்களில் குறைந்தபட்ச வசதிகளுடன் கூடியது முதல் குளிர்ச்சாதன வசதிகளுடன் கூடிய காட்டேஜுகளில் யாத்திரிகர்கள் தங்கலாம்.

குறிப்பிட்ட தொகையினை ஒரு வாரத்திற்கு முன்கூட்டியே செலுத்தினால், திருமலையில் அல்லது திருப்பதியில் தங்கு வசதிக்கான ஒதுக்கீடு அளிக்கப்படும். தேவையான தங்குவசதியின் சரியான விவரத்தையும், சரியான முகவரியையும் தங்கள் மனுவில் குறிப்பிட்டு அதனுடன் தொகைக்கான டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டர் ரசீதினை இணைத்தல் வேண்டும். குறிப்பிட்ட தங்குவசதி அளிக்க முடியாதிருப்பின், வேறு தங்கு வசதி அளிக்கப்படும். தொகை பெற்றுக் கொண்ட உடனேயே, ஒதுக்கீடு அட்டை அனுப்பப்படும். தங்கு வசதிக்காகத் திருமலைக்கு வருபவர்கள், இவ் ஒதுக்கீடு அட்டையினை குறிப்பிட்ட விசாரணை அலுவலகத்தில் காட்டல் வேண்டும். இவ் அட்டையினையோ அல்லது மணியாடர் ரசீதினையோ அல்லது தொகையினைப் பெற்றுக்கொண்டதற்கான ரசீதினையோ காண்பிக்காவிட்டால். அவர்களுக்கு தங்குவசதி அளிக்கமுடியாது. ஒரு நாள் என்பது காலை 8 மணி முதல் அடுத்த நாள் காலை 8 மணி வரை என்பதாகும். டிமாண்ட் டிராஃபட் அல்லது தொகை பெற்றுக் கொண்டதற்கான ரசீது அல்லது மணியார்டர் ரசீதுடன் கூடிய விண்ணப்பங்கள் யாவும் Reception Officer, T. T. Devasthanams, Tirumala அல்லது Tirupati எனும் முகவரிக்கே அனுப்பப்படல் வேண்டும். டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியாடர் குறிப்பிட்ட Reception Officer எனும் பெயரில்தான் எடுத்தல் அல்லது அனுப்பப்படல் வேண்டும். செக்குகள் (Cheques) ஏற்றுக்கொள்ளப்படமாட்டா.

Regd. No. H/TRP/12 

ஸ்ரீ வேங்கடேஸ்வர பரப்ரஹ்மணே நம:

# நீ ஓர் இந்து - அதற்காகப் பெருமைப்படு!
# பெருமை வாய்ந்த சரித்திரம் உனக்குள்ளது; அதனை மறவாதே!
# அரும்பெரும் தத்துவக்கருத்துக்களை அடிப்படையாகக் கொண்ட பேரியக்கம் இந்து சமயம்

உண்மையான ஓர் இந்துவாக செயற்படு — கீழ்வருவனவற்றைக் கடைப்பிடி

- உனக்கு விருப்பமான சமயக்குறியை (திலகம், சந்தனப்பொட்டு. விபூதி, நாமம்) நெற்றியில் இட்டுக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்.

- தினம் குறைந்தபட்சம் ஒரு முறையாவது ஸ்நானத்திற்குப் பிறகு இறைவனின் நாமத்தை ஜெபிக்கவும்:

கீழே கொடுக்கப்பட்டுள்ள நாமங்களில் ஒன்றை அல்லது ஒருசிலவற்றையாவது தேர்ந்தெடு

ஓம் ஸ்ரீ வேங்கடேசாய நம:

ஓம் நமோ பகவதே வாசுதேவாய

ஓம் நமோ நாராயணாய

நமசிவாய

ஹரே ராம ஹரே ராம ராமராம ஹரேஹரே
ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ணகிருஷ்ண ஹரேஹரே

- தினந்தோறும் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதத்தின் குறைந்தபட்சம் 10 ஸ்லோகங்களை பாராயணஞ்செய்.

- வாரத்திற்கு ஒரு முறை உன் குடும்பத்தாருடன் உனக்கு விருப்பமான கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு.

- உங்கள் வீட்டிற்கு முன் 'ஓம்கார்' எனும் முத்திரையினை ஒட்டவும்.

- தினந்தோறும் பகவத்கீதையில் குறைந்தபட்சம் ஒரு ஸ்லோகத்தையாவது பாராயணஞ்செய்.

- சமுதாய சமய விழாக்களில் ஏதாவது ஒருவகையில் பங்கேற்றுக்கொள்.

அவனை நம்பு - அவன் உன்னைக் காப்பான்

## திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.